# முரசொலி

## முரசு 1, ஒலி 33

## November 12, 1954

Record no. 945

*Muracoli*

*Muracu 1, oli 33*

*November 12, 1954*

Record no. 945

2 அணா

மு.கருணாநிதி

முரசு 1 | சென்னை | 12 — 11 — 54 | வெள்ளி | ஒலி 33

## ★ குறளோவியம் ★

மாலை நேரத்திலே-சோலை ஓரத்திலே-வேலை நிகர்த்த விழியினர் காதல் பயில்வர். அதுபோது ஆலையிட்ட கரும்பென அவதிப்பட்டு உழல்வர் ஆளன் அருகிலா மாதர். அந்திவானத்தின் அழகு காண்பர்-அதனோடு தன் தலைவனை ஒப்பிடும் அழகன் அங்கு வரவில்லையே என அயர்வர். தென்றல் அவர்தம் ஆடை நகர்த்தும். அதற்கு வாழ்த்துக் கூறித்தம்மைக் கேலி செய்யும் இன்ப லோக ஏந்தல் இன்னும் வரக்காணேமே என விம்முவர். பூங்கொம்பு மலரிதழைத் திறப்பதற்கு முன்பே தேன்வண்டு பறந்து வரும் தன்மை காண்பர். "வண்டு தழுவும் மலர்மார் கற்கண்டே!" என இன்பம் மொண்டு தரும் எந்தன் துரையை இன்னும் காணேமே என ஏங்குவர். மனம் வீங்குவர். மாலைப்பொழுது அவர்தம் நெஞ்சில் படைகொண்டு தாக்குவது போல் தோன்றும்-இன்பம் தரவல்லகாதலையே நோயென்று கூறுவர். அந்த மனோநிலையைத்தான் வள்ளுவர் அழகாகக் கூறுகிறார்.

காலைப்பொழுதிலே அரும்பாய்த் தோன்றி, பகலெல்லாம் பேரரும்பாகத் தழைத்து, மாலையில் மலராக மாறுகிறது இந்தக் காமநோய். அதற்கு இதோ குறள்:

"காலை அரும்பிப் பகலெல்லாம்
போதாகி மாலை மலரும் இந்நோய்"

அந்நோய் மலருகிற மாலை நேரம் எப்படி இருக்கிறது தெரியுமா மங்கைக்கு? அவளைக் கொல்ல வருகிற சேனையானது நெருப்புப்போல உள்ள மாலை நேரத்திற்கு தூதாக வருகிறதாம்.

"கொல்லும்படை, அழல் போலும் மாலைக்குத் தூதாகி" என்கிறார்.

அதுமட்டுமா?

மாலை நேரத்திலே ஆயன் குழலூதிக் கொண்டிருக்கிறான். குழலிலேயிருந்து இனிமை அருவியெனக் கொட்டுகிறது. தென்றலுக்கே இன்பம் சேர்க்கிறது அந்த இசை. அசைந்தாடும் மலர்க் கொத்துகள் குழலிசைக்கு அபிநயம் காட்டுவதுபோல் காட்சி தருகின்றன. நாகத்தையும் மயங்க வைக்கும் என்பர் குழலோசை. அதுவும் ஆயன் பாடி இளைஞன் அந்த வாத்தியத்திலே திறமைசாலி. அந்தக் குழலோசையைப் பற்றி காதலனைக்காணு கட்டழகி என்ன கூறுகிறாள் தெரியுமா? "என்னை வருத்தும் சேனை; மாலைக்குத் தூதாக மட்டுமல்ல-ஆயன் குழலாகவும் வருகிறது போலும்" என்று புலம்புகிறாள்.

"அழல் போலும் மாலைக்குத்
தூதாகி ஆயன்
குழல் போலும் கொல்லும் படை."

# அன்பே சிவமா? சிவம்தான் அன்பா?

'தேளுக்கு கொடுக்கில் விஷம்
பாம்புக்கு பல்லில் விஷம்'
'பாம்பென்றால் படையும் நடுங்கும்.'

இவை தமிழ் நாட்டின் படிப்பிணிகள் — பாலர் பள்ளி முதல் பல்கலைக் கழகம் வரையிலே எச்சரிக்கப்பட்டு வரும் பொருள் பொதிந்த முதுமொழிகள். பாம்பு கடித்தால்-அதுவும் நல்லபாம்பு கடித்து விட்டால் வாழ்வு முடிந்துவிட்டதென்றுதான் நாடு நினைக்கிறது. அவ்வளவு கொடிய விஷம் அந்த அரவத்திற்கு உண்டு. பின் ஏன் அதை நல்லபாம்பு என்று சொல்ல வேண்டும்? நல்லபாம்புக்குள்ள விஷம்மற்ற பாம்புகளைக் காட்டிலும் நிரந்தரமாக பூரணத்துவம் பெற்று விளங்குகிறது என்பதை நிரூபிப்பதற்காக சேர்க்கப்பட்ட அடைமொழிதான் அந்த 'நல்ல' என்ற சொல் என நாம் நினைக்கிறோம். சுத்த முட்டாளை 'நல்ல முட்டாள்' என்று கிண்டலாகச் சொல்வதில்லையா? அதுபோல!

அமைச்சர் பக்தவத்சலனார் இந்தப் புதை பொருளை புரிந்து கொண்டவரோ என்னவோ நாமறியோம்; அல்லது, புரிந்து கொண்டாலும், அதை நாம் ஒப்புவதா என்ற அகந்தை உள்ளம் படைத்தவரோ அதுவும் நமக்குத் தெரியாது. நாமெங்கே? நாடாளும் மந்திரிகளெங்கே? ஓட்டுப் பெட்டி நிறைந்துவிட்டால் நாட்டுக்கு தாங்கள் புதுப்பிறவி என்று எண்ணி விடுகிறவர்களாயிற்றே அந்த பாட்டாளி(?) வர்க்கத்தினர்! கலைமகள் தீபாவளி மலரில் அமைச்சர் பக்தவத்சலனார் 'மூடபக்தி' என்ற தலைப்பில் ஒரு கட்டுரை எழுதியிருக்கிறார். மூடபக்தி நல்லாம்புக்குச் சமம் என்று வலியுறுத்தியிருப்பதை பார்க்கும்போது அமைச்சரின் ஆராய்ச்சிமேதாவிலாசத்தை எண்ணி நம்மால் சிரிக்காமல் — அப்படிப்பட்டவரை அமைச்சராகப்பெற்றிருக்கிறது அறிவு சார்ந்த தென்னாடு என்று சிந்தை நோகாமல் இருக்க முடியவில்லை. அத்தகைய தீர்க்க சிந்தனையிலிருந்து தெறித்துச் சிதறிய தெளிந்த கருத்துக்கள் அவைகள்! "நல்லபாம்பு என்பதைப் போன்றது மூடபக்தி என்ற தொடர். விஷத்தை உடைய பாம்பு எவ்வளவு நல்லதோ அவ்வாறே பக்தியில் மூடத்தனத்தைக் காண்பது" மூடபக்தி நல்ல பாம்புக்குச் சமமாம்! அமைச்சர் இந்த அளவோடு நிறுத்திக் கொண்டிருந்தால் அதாவது 'நல்லபாம்பு என்பதைப் போன்றது மூடபக்தி' என்பதோடு மட்டும் முடித்துக் கொண்டிருந்தா நாம் துவக்கத்திலே சொல்லியிருப்பது போன்று தெளிந்த கருத்துதான். அவை, நல்லபாம்பு தீண்டியவன் வாழமாட்டான்- அதுபோலவே மூடபக்தி கொண்டவன் வாழ வகையற்ற சோம்பேறியாகி விடுவான் என்ற பொருளைத்தான் அமைச்சர் பெருமான் எடுத்துரைக்கிறார்-என்னே அமைச்சரின் புரட்சிக் கருத்து என்று பெருமைப்பட்டிருப்போம். மக்களிடம் நல்லபெயர் எடுக்கத்தான் மந்திரிகளுக்கு எண்ணமில்லையே! நல்லபாம்பு எவ்வளவு நல்லதோ அவ்வளவு நல்லது மூடபக்தியும் என்றல்லவா வாதம் செய்கிறார். இந்த அளவில், இவர்களெல்லாம் குறளுக்கு உரையெழுத முனையாதிருப்பது தமிழகத்திற்கு ஒரு நல்லகாலம் என்றுதான் சொல்லவேண்டும்.

நல்லபாம்பு—நல்லகுடிகாரன்

நல்ல பாம்பு—நல்லமுட்டாள்

நல்லகுடிகாரன்! - சூரியோதயத்தில் இரண்டு சுரைக்கூடு சாராயம், நடுப்பகலிலே பீர் பாட்டில் இரண்டு, அந்தி நேரத்திலே பிராந்தி, பாதிராத்ரியிலே பழங்கள்—இவைகள் இல்லாது வாழ முடியாதவன் என்றுதான் பொருள். அமைச்சரின் கருத்துப்படி நல்ல குடிகாரனென்றால்நாணயமானவன் ஒழுக்க சீலன் என்று பொருள்! அது போலத்தான் அறிவுச் சூன்யம் நல்ல முட்டாளென்று அழைக்கப் படுவதும்.

"கடவுளிடம் பக்தியுள்ளவன். மனிதர்களிடம் பக்தி செலுத்துகிறன்"

அமைச்சர் பக்த வத்சலனார் அக்னியாஸ்திரங்களிலும், சக்கராயுதங்களிலும் அபார நம்பிக்கை கொண்டவரல்லவா! அதனால்தான் அவரது கருத்துக்களை அப்பேர்ப்பட்ட ஆயுதங்களாக எண்ணிக்கொண்டார் போலும்! அதற்குத் துணையாக 'அன்பேசிவம்' என்ற சொற்றொடரையும் எடுத்து முன் வைத்திருக்கிறார், கடவுளிடம் அன்புள்ளவன் மனிதர்களிடம் கருணை காட்டுகிறனும் இன்று நாட்டில் கண்ணீர் சிந்துவதும், செந்நீர் வடிப்பதும் ஆலயங்களிலே 'அன்புக்கரசு'களாக நடித்து 'ஹரஹரா நமப்பார்வதி பதேயே' என்று பக்திக் கோஷமிடுபவர்களின் அடாத செயல்களின் சாகுபடிதான் என்பதை அமைச்சர் எங்ஙனம் அறியப்போகிறார்! இதற்கும் 'அன்பேசிவம்' என்பதற்கும் என்ன தொடர்போ நாமறியோம். கடவுள் பக்தியுள்ளவன் கருணையாக இருக்கிறன் என்பதற்கும் 'அன்பே சிவம்' என்பதற்கும் என்ன சம்மந்தம்? 'அன்புதான் சிவம்' என்று மூத்தவர்கள் சொல்லிப் போயிருக்கிறார்கள். அமைச்சர், சிவன்தான் அன்பு என்று வாதிடுகிறார். மக்களிடம் அன்பு காட்டு — அது மகேஸ்வரனை வழிபட்டதற்குச் சமம் — என்பதுதான் அன்பேசிவம் என்பதின் பொருள்!

ஆனல் அமைச்சரின் தொனியைப் பார்த்தால். "சிவம்தான் அன்பு—எனவே நீ ஆண்டவனை நேசி—அது அனைவரையும் நேசித்ததாக அர்த்தம்" என்று வாதிப்பதற்கு ஒப்பாகிறது.

'வட்டிக்கடை நடத்தலாம், குடும்பங்கள் பலவற்றை குட்டிச் சுவராக்கலாம், வடக்கு மலையானுக்கு அன்புகாட்டி வெள்ளிக்குத்துவிளக்கு வாங்கி வைத்தால் போதும்' என்ற வர்ணச்ரமத் தத்துவத்திற்கும் அமைச்சரின் கருத்திற்கும் என்ன வித்தியாசம்! இதோ அமைச்சர் தொடர்கிறார் பாருங்கள்!

"தன்னிடமே நம்பிக்கை இழந்தவன்தான் நாஸ்தீகம் பேசுகிறன்—அவன் அன்பு என்பதையே உணராதவன்"

எது நாஸ்திகம் என்றே இன்னும் முடிவு கட்டப்படவில்லை— அமைச்சர் அதற்குள்ளாக நாஸ்தீகர்களை கண்டு பிடித்து விட்டார்.

'மூடநம்பிக்கையை கண்டிப்பது நாஸ்தீகமென்றால் நான் ஒரு நாஸ்தீகன்தான்' என்று அன்றே ஒரு ஆங்கிலக்குயில்

○ தொடர்ச்சி 10—ம் பக்கம்

# தாயகத்திற்கு துரோகமா? தலைமையின் கட்டளையா?

விலங்கு முறிந்தது!
புதுவை மண் புது வாழ்வு பெற்றது!
டூப்ளே பரம்பரையினர் கப்பலேறினர்கள்!
அந்நிய ஆதிக்கம் அழிந்தொழிந்தது!

காரை-புதுவை விடுதலை அடைந்த செய்தி குறித்து பத்திரிகைகளில் இப்படித்தான் தலைப்புகளிட்டு செய்திகள் வெளியாகியிருந்தன. கண்டோம்—களிப்பெய்தினேம்—பூரித்தது உள்ளம்-புல காங்கித மடையாதார் இல்லை. நூற்றுண்டுக் கணக்கில் வேற்றாரின் ஆட்சியிலே வதிந்த நம்மவர்கள் ஏதோ புதிய நிலை அடையப் போகிறார்களே என்ற மகிழ்ச்சி யாருக்குத்தான் இருக்காது. படிக்கத் தெரியாதவர்களுக்கு தேசீய ஏடுகள் போட்டுக் காண்பித்த படங்கள் கூட பெரிதும் உதவத்தான் செய்தன. "விடுதலை வீரர்களே வருக" என்ற வாழ்த்து வளைவுகளைக் காணுக! ஆர். கே. நேரு பேசுகிறார் — மக்கள் ஆர்வத்துடன் கேட்டுக் கொண்டிருக்கிறார்கள் — சென்னை படையினர் அணிவகுத்து நிற்கும் அழகு காணீர், துறைமுகத்தில் மூவர்ணக் கொடி, இப்படிப்பட்ட முக்கிய காட்சிகள் படித்தவர், படியாதவர்கள் அனைவரின் உள்ளங்களையும் மகிழ்விக்கத்தான் செய்தன. ஆனல்? புதுவையின் சரிதத்திலே ஒரு புதிய நிகழ்ச்சி துவங்குகிறது, வரலாற்றிலேஉரிமைக்குரலுக்கு மதிப்பு ஏற்றி எழுதப் படுகிறது, பீரங்கி வேட்டும், துப்பாக்கிச் சத்தமும், பிரஜைகளின் முழக்கத்தின் எதிரே ஊசி விழும் சிற்றெலியாக்கப் படுகிறது, என்றாலும் இந்தியத் துணைக் கண்டத்து ஆட்சி பீடத்திற்கு அது முக்கிய சம்பவமாகத் தெரியவில்லை. ஏன்?

மக்கள் தாயகத்தோடு இணைவதற்கு துடித்தார்கள். துவளத்துவள அடித்து துன்புறுத்தப்பட்டார்கள். துப்பாக்கி ரவைகள் துளைத்திருக்கின்றன, அவமானம் துடைக்க களம் புகுந்த காளையர் பலரை! அத்தகைய போராட்டத்தின் வெற்றி விழாவில், குடைபிடித்து நிற்கும் டில்லி குணாளர்கள் கலந்து கொள்ளவில்லை. எங்கோ இருந்த ஆர். கே. நேருவின் பவனி மட்டும் ஆடம்பரத்தோடு நடைபெற்றிருக்கிறது? இந்த நிலை ஏற்பட வேண்டியதின் அவசியம் யாது? அதிலே மறைந்து கிடக்கும் மர்மம் என்ன? தோழர்களே, நீங்கள் நன்றாகச் சிந்தித்துப் பார்க்க வேண்டும். நடைபெற்ற போராட்டமோ நாசம் விளைவிக்கக் கூடியதல்ல, நல்வாழ்வு தரக் கூடியது. அதில் டில்லி கலக்கவில்லை- ஒரு அதிகாரி நீங்கலாக! அது மட்டுமல்ல; டில்லிதான் கலக்கவில்லை— வெகு தூரம் அது; அண்மையிலுள்ள சென்னையும் பங்கெடுத்துக் கொள்ளவில்லையே ஏன்? புதுவை, சென்னையின் பக்கத்து வாசல், வீட்டு உள் பகுதியின் இரண்டாம்கட்டு. என்றாலும் சென்னை கலந்து கொள்ளவில்லை— காரணம்? காரை, புதுவை மக்கள் மீது கருணையில்லையா காமராசருக்கு? அல்லது அவர்களை டூப்ளே தங்களின் வாரிசாக இந்தியாவில் வைத்துப் போய்விட்டான் என்று கருதுகிறாரா? அல்லது அதுதான் சி. பிரிவு மாநிலமாகப் போகிறதே என்று எண்ணி விட்டாரா? இருக்காது. தானுடா விட்டாலும் தசையாவது ஆடியிருக்கும்—ஆனல், போய், கலந்து கொள்ளும்படி டில்லியிலிருந்து கட்டளைவந்திருக்காது. கேவல்கிங் தர்பார் ஆர். கே. நேருவின் மேல் பார்வையில்நடைபெறட்டும், சென்னையைக் கொண்டு போய் அங்கு ஏன் பிணைக்க வேண்டும், அதனுல் டில்லிக்குத் தானே கௌரவக்குறைவு என்று டில்லியார் எண்ணியிருப்பார்-இதைத் தவிர காரணம் வேறு என்ன வாக இருக்க முடியும்! கட்சி சார்பில்லா அரசு என்று சொல்லிக்கொண்டு ஒரு கட்சியின் மாநாட்டுக்கு பத்து லட்ச ரூபாய் செலவு செய்ய திட்டமிடுகிற அதிகார வர்க்கம், அடிமைத் தளைகளை அறுத்தெறிந்த ஒரு சின்னஞ் சிறு பகுதியின் விடுதலை விழாவில் பங்கேற்று பரவச மூட்டவில்லையென்றால் தேசிய ஒற்றுமை எங்கிருந்து வரும்? இப்போதிருக்கிற இருகரமில்லாத பாரத மாதாவை தேசீயத் தோழர்கள் அதுதான் 'பரிபூரணம்' என்று எண்ணினாலும் அந்தப் 'பரிபூரணம்' எத்தனை நாளைக்கு நிலைக்கும்?

One side of the page is dark



# தலையங்கம்

சென்னை [12—11—54] வெள்ளி

## பறக்கும் தட்டுகள்!

"பஞ்சவர்ணக் கிளியைப் பார்த்திருக்கிறாயா?"

"இல்லை; இல்லை. பலர் சொல்லக் கேட்டிருக்கிறேன்"

"இதோ; அதுதான் இது" என்று சொல்லி காக்கையைப் பிடித்து குருடன் கையில் கொடுத்தானும் ஒருவன். அப்படி காக்கைக்கு பஞ்சவர்ணம் தீட்டும் வேலையில்தான் இன்றைய காங்கிரஸ் காவலர்கள் ஈடுபட்டிருக்கின்றனர். கருத்துப்போன ஈயத்துண்டுகளையும், கட்சி மாறிகளையும் அரசு கட்டிலேற்றி அழகு பார்த்தனர். ஆனலும் அந்த காகங்களோ இன்று கரைய ஆரம்பித்துவிட்டன. மாகாணத்துக்கு மாகாணம் காங்கிரஸ் மந்திரிசபை கவிழ்ந்த வண்ணம் இருக்கிறது! கண்மூடி மௌனிகளாய் இதுகாறும் மக்களை மதித்திருந்த காங்கிரசும், கரைந்து வரும் இன்றைய நிலைகண்டு-விரைந்து வரும் சாவை அணைத்திடும் வண்ணம் கைகளைத் தயார் செய்து கொள்கிறது. ஒரு காலத்தில் 'பாரத மாதா'வின் தளை உடைத்த காங்கிரஸ் இலை உதிர்த்து நிற்கும் நெடுமரம் போல களை இழந்து நிற்பதைப் பாருங்கள்—

ராஜஸ்தான் காங்கிரஸ் கட்சியிலே இத்தனை நாட்களும் நீண்டி, நெளிந்து கொண்டிருந்த 'பூசல்' புழு, இப்போது 'ஆட்கோல்லி'யின் வடிவமேந்திவிட்டது. நவம்பர் 6-ந் தேதியன்று ஜய்பூரில் நடைபெற்ற சட்டசபைக் காங்கிரஸ் கூட்டத்தில் முதன் மந்திரி ஜேயின் நாராயணன் வியாஸ் மீது சொந்தக் கட்சிக்காரர்களே 'நம்பிக்கையில்லாத் தீர்மானம்' நிறைவேற்றியிருக்கின்றனர்.

பாவம்! வியாஸா பதவி இழந்தார்! பதவி எலும்புக்கு பல்லிளித்துக் கிடந்த மோகன்லால் சுகதியா இப்போது பட்டத்துக்கு வருகிறார்.

பிளவும், பூசலும் புயல் வடிவு கொள்வதைக் கண்டதும் வியாஸா பதவியை ராஜிநாமா செய்திருக்க வேண்டியதுதான், நியாயம்! அவரோ, சொந்தக் கட்சிக்காரர்களே நம்பிக்கையில்லாத் தீர்மானம் போட்டு, அடித்துத் துரத்தினாலன்றி அசையேன் என்று சொல்லிவிட்டார், 'அசகாய சூரர்!'

தோழமை உள்ளத்தோடு காரியமாற்ற வேண்டியவர்கள், நேரிய வழியை மறந்து நீசத்தனம் புரிகின்றனர்.

'வாழிய சுதந்தர' மெனப் பாயிரம் பாடுபவர்கள்தான், இப்படி நாய், நரிகளைப் போல சண்டை பிடித்துக் கொள்கின்றனர்.

துரோகமும், கோஷ்டி மனப்பான்மையும் ராஜஸ்தானில் மட்டுமல்ல; திடமான அரசாங்கமதை அமைத்துவிட்டதாக இதுநாள்வரை தம்பட்டம் போடப்பட்ட ஆந்திராவிலும்தான் அந்த 'பேத உள்ளமு'ம் 'மோதல்' பண்பும் முகில் கிழிக்கும் மதிபோல வண்ணமுகம் காட்டி நிற்கின்றன.

"பாவிகளே! நீங்கள் பெற்ற சுயராஜ்யத்தின் பலன் இதுதானு!" என்று பட்டினி பட்டாளங்களின் சார்பாக இடியென முழக்கிய ஏந்தல்கள்—ஐக்கிய முன்னணிகளின் ராஜா சிதம்பரங்களாக நின்று தேசிய வீரர்களுக்கு சிம்ம சொப்பனம் காட்டியவர்கள்—இந்த வீரர்களெல்லாம் சட்டசபைக் கூடத்தின் படியேற்றப் பட்டனர்—காங்கிரசின் தடித்த போர்வையுடன்!

கோடரியின் காம்புகளை நம் கிளைகளோடு பொருத்தி ஒட்டுவேலை நடத்துகிறீர்களே என்று நாமெல்லாம் அப்போது எதிரொலித்தோம்.

நாடறிய நம் திட்டங்களை உதைத்து மிதித்தவர்களின் கால்களுக்கு, முத்தமிட்டு, மகிழ்கிறீர்களே, இது நல்ல பண்பாகுமா? அவர்கள் இன்னும் திருந்தியபாடில்லையே? என்றும் எச்சரிக்கை விடுத்தோம்.

அன்று கேளாத காதினராய் நடித்தவர்கள் இன்று மீளாத துயரத்தில் உழலுகின்றனர்.

இதே முறையைப் பின்பற்றித்தான் சென்ற ஆண்டு ஆந்திரமாகாணத்தின் பிரதமராக பிரகாசம்காரு ஆக்கப்பட்டார். பாவ மன்னிப்புச் சீட்டு பெற்றதும், பாவவிடுதலை பெறும் போப்பாண்டவரின் பழைய பித்தலாட்டக் கொள்கையைப் போல, இடைக்கால வரலாற்றை மறந்து விட்டு—பிரஜா சோஷலிஸ போர்க் கருவிகளைத் தூக்கி எறிந்து விட்டு பிரகாசம் காங்கிரஸ் அங்கத்தினர் சீட்டில் கையெழுத்து போட்டார். தான் செய்த 'அரசியல் பாவங்களிலிருந்து விமோசனம் பெற்றதாகவும் கனவு கண்டார்!

அந்தோ பரிதாபம்! அவரது கனவு கலைந்தது. பதவியே பிரதானமாய்—நல்ல கொள்கைகளை உதாசீனம் செய்பவர்களின் கதி இதுதான் என்று, சென்ற கிழமை அவர்மீது ஆந்திர சட்டசபையினர் நம்பிக்கையில்லாத் தீர்மானம் கொண்டு வந்திருக்கின்றனர்.

ஆந்திர கேசரியையும், அந்த வாசனை வீசி விபீஷணப் பூக்காட்டில் பூத்து நிற்கும் துரோக மலர்களையும் நினைக்கும் போது நமக்கு புதியதொரு உவமை நினைவுக்கு வருகிறது.

பறக்கும் தட்டுகளைப்பற்றி கேள்விப் படுகிறோம். முற்போக்குத் தாள்கள்கூட இந்த பர பரப்பான செய்தியை விமர்சிப்பதில் முனைந்திருக்கின்றன. திடீரென ஒளிவீசி, முகில் கிழித்துச் செல்கின்றனவாம் — அவைகள்! பின்னர், திடீரென்று மறைந்து விடுகின்றனவாம்.

அந்தப் பறக்கும் தட்டின் வகையைச் சேர்ந்தவர்தான் இந்தப் பிரகாசமும்! பதவி கிடைக்கும் போது—அதுவும், முதன் மந்திரி பதவியாகக் கிடைக்கும் போது மட்டும், தும்பைப்பூ நிகர்த்த கதர்ச் சட்டைக் காரர்கள் மத்தியிலே ஒளிவீசும் முகத்துடன் காட்சி தருகிறார்

இத்தனை காலமும் ஆந்திர மண்டலத்தில் காங்கிரஸ் போர்வையில் வட்டமிட்ட அந்த பறக்கும் தட்டு மறைந்து விட்டது.

ஆனலும், ராஜா சிதம்பரங்களாக, ராமசாமி படையாச்சிகளாக மாணிக்க வேலர்களாக, இந்நாட்டு அரசியலை வட்டமிடும் பறக்கும் தட்டுகள் இன்னமும் மறைந்தபாடில்லை.

## வாழ்க குறள்நெறி!

★

திறல்மறவர் பலர் உலவிய இந்தத் திராவிடத்தரணியில் திங்களைத் தொத்திக் கிடக்கும் களங்கமென தன்மானம் இழந்த கம்பநாட்டாரும்—அவன்வழி வந்த வம்புமடத்தாரும் சேர்ந்து; இன உணர்ச்சி இழந்தோரைத் திரட்டிக் கொண்டிருக்கும் வேளையிலே எங்கிருந்தோ ஒலிக்கும் திருக்குறள் முழக்கம் நம்மையெல்லாம் பேருவகையில் ஆழ்த்துகிறது. ஆம்; அண்மையில் சென்னை நுங்கம்பாக்கத்தில் நடைபெற்ற 'குறள்நெறிவிழா' வைத்தான் குறிப்பிடுகிறோம்.

அறிஞர் அண்ணவும், புலவர் மணிகள் பலரும், கழகக் காளையர் அனைவரும் பங்குகொண்டு அந்தவிழாவிற்கு சிறப்பு சேர்த்தனர்.

ஆச்சாரியாரும் அவர்தம் சிந்தை குளிப்பாட்டுவதையே பிறவியின் பயனாய் கொண்டொழுகும் அடியார்க்கடியார்களும் 'திருக்குறள் ஒரு ஆத்திக நூலென்று, கற்ற வித்தையனைத்தையும் காட்டி சாதித்திடும் வேளையில்—வள்ளுவனை கம்பனோடு சேர்க்காதீர்கள் என்று குறள்நெறி விழாவினர் விடுத்த எச்சரிக்கை குறித்து நாடு மகிழ்கிறது; நாமும் மகிழ்கிறோம். அந்த விழாவின் செயலாளராம் தோழர் பூ. கணேசனும், வரவேற்பு குழுத்தலைவர் தோழர் சங்கர நாராயணனும் விழாவின் வெற்றிக்கு உழைத்த ஏனைய தோழர்களும் பாராட்டுக்குரியவர்கள்.

வாழ்க குறள் நெறி!
வெல்க குறளறம்!!

## சரியான பதில்!

டாம்பீகமாக உடையணிந்து சாலையோரத்தில் போய்க் கொண்டிருக்கும் ஆசாமி ஒருவர் 'ஓ' வென்ற பேய்க்கூச்சல் கேட்டு திடுக்கிட்டார். சப்தம் வந்த வீட்டினுள் நுழைந்து வீட்டுக்காரியைப் பார்த்து 'என்ன நடந்தது' என்று அதிர்ச்சியோடு கேட்டார். விஷயம் வேறொன்றும் பிரமாதமில்லை! அந்த வீட்டுச் சிறுவன் வெள்ளி நாணயம் ஒன்றை விழுங்கி அவஸ்தைப் பட்டுக் கொண்டிருக்கிறன். அதைப் பார்த்து பயந்த வீட்டுக்காரிதான் அக்கம் பக்கத்தவர் உதவி நாடி கூச்சல் போட்டிருக்கிறாள்!

வந்த மனிதர் இந்த செய்தி கேட்டதும் பையனின் வாயைத் திறக்கச் சொன்னர். அவனைத் தலை கீழாகத் தூக்கி நிறுத்தி, உடம்பைக் குலுக்கினர். சிறிது நேரத்திற்கெல்லாம் அந்த நாணயம் வெடுக்கென்று கீழே விழுந்தது.

உடனே அந்த அம்மா அவரைப் பார்த்து; "டாக்டர் ஐயாவே! மிகவும் வந்தனம்;" என்று பணிவோடு சொன்னள்.

அதற்கு அவர், "நான் டாக்டர் அல்ல அம்மா; நான் வருமான வரி வசூலிக்கும் ஆபீசர்" என்று சிரித்துக்கொண்டே பதில் சொல்லிவிட்டு, நடையைக் கட்டினாராம் — டைஜஸ்ட்

# ★ வினை விதைக்கிறார்கள்! ★

"அதோ, வண்டியிழுத்துப் போகிறானே, அவனுடைய மேனி மின்னுவதைப்பார்! அது சுகவாழ்வின் பிரதிபலிப்பு, உல்லாசிக்கு அடையாளம் என்று எண்ணிவிடாதே. அப்படி நினைத்தால் அது மாபெரும் தவறு. உழைப்பின் உடனடிப் பரிசாக அந்த நல்லவர்களுக்குக் கிடைக்கப் பெறும் வியர்வையின் மீது உச்சிமீதிருந்து கதிரவன் தாக்கியவுடன் ஏற்படும் ஒளி தானப்பா அந்த மின்னல், பளபளப்பு எல்லாம்" — வெண்புறு சிறகடிக்க வேண்டும், வான வெளி வழி கொடுக்க வேண்டும் என்று உலக மன்றங்களிலே எடுப்பான தொனியில் பேசும் இந்தக் காலத்திலேயே இப்படி ஏழைகளுக்காகப் பரிந்து பேசுவோர்,- வியர்வைக்கும் விழி நீருக்கும் வழிவகைகள் செய்தாகவேண்டும் என்று எண்ணுவோர் மிகக்குறைவு. குறைவு என்று நாம் கூறுவது, குபேர வாழ்வு நடத்துவோர் தங்கள் தங்கள் இல்லங்களிலே உள்ள செல்வங்களை பகிர்ந்தளிக்கவேண்டும் என்ற எண்ணத்தோடு அல்ல. நல்லன செய்யாவிட்டாலும், நாசமாவது விளைவிக்காதிருக்கலாமல்லவா! மனோகர வாழ்வு நடத்து! மறுப்பாரில்லை, ஆனால் மயிலும், குயிலும் மலர்த் தோட்டத்தில் ஏன், அது மாளிகை வாசிகள் ரசிப்பதற்கே மகேஸ்வரனால் படைக்கப் பட்டவை என்று சொல்லாதே. போதை நீர் அருந்து, அதற்காக சாமான்யர்களுக்கு தாகம் தீர்க்கும் தண்ணீரும் தனக்குத்தான் சொந்தமென்று சொல்லாதே" இந்தக் கருத்து பேதத்தை வைத்துத்தான் நாம் குபேர புரியினரை சாடுவதெல்லாம்.

ஃ ஃ ஃ

இந்து மகா சபையும், ஆர். எஸ். எஸ். இயக்கமும் வர்ணாஸ்ரமதத்துவத்தின் இரட்டைக் குழந்தைகள்-அற்ப சுகத்திற்கு அரக்கத்தனமும் செய்யத் துணியும் துஷ்டப் பாலகர்கள் அவர்கள். நல்லவர்கள் துக்கப்படும்போது அவர்கள் 'கக்கை' போட்டுச் சிரிப்பார்கள்—இனிப்பும் வழங்குவர், இன்னொலியும் எழுப்புவர். அந்த விசித்திரப் பாலகர்கள்தான் இப்போது வினைவிதைக்கத் தொடங்கியிருக்கிறார்கள். சென்னைச் சுவர்களெங்கும் சுவரொட்டிகள் ஒட்டப்பட்டிருக்கின்றன, "நாடு நலம் பெற பசுவதையை தடை செய்க' என்று எழுதப்பட்டு. நாடு நலம் பெறுவதற்கு, வாழ்வு செழிப்பதற்கு வழி சொல்லிக் கொடுத்திருக்கிறார்கள் அந்த துஷ்டச் சிறுவர்கள். அந்த அணைக்கட்டைக் கட்டினால் இத்தனை ஏக்கர் நிலம் சாகுபடி செய்யலாம், இந்த உரமிட்டால் இத்தனை ஏக்கர் நிலத்தில் இத்தனை களம் நெல் காணலாம் என்றல்ல அவர்கள் நாடு வளம்பெற வழி சொல்லியிருப்பது. பசுவதையைத் தடை செய்தால் நாடுவளம் பெற்றுவிடுமாம். நாடு என்று ஒன்று இருக்கிறது, அந்த நாடு நலம் பெறவும் வேண்டும் என்று அவர்கள் நினைக்கிறார்களல்லவா, அதுவரையில் நமது மகிழ்ச்சி. ஆனால், பகலவனின் தாக்குதலையும் தாங்கிக் கொண்டு பாடு படும் பாட்டாளி சமுதாயத்தின் மீது காட்டாத இரக்கத்தை — உலக ஜீவராசிகளில் உயர்த்தி மதிக்கப் படுகிற மனித வர்க்கத்தினிடத்தே காட்டாத இரக்கத்தை ஏன் மாட்டினிடத்தில் காண்பிக்க வேண்டும்?-இது தான் வளர்ந்து வரும் அறிவியக்கத்தின் கேள்வி. அதற்கு சரியான பதில்- நாமெல்லாம் ஒப்புக் கொள்ளும்படியான பதில் அவர்களிடமிருந்து கிடைக்கவில்லை- அவர்கள் தரும் விளக்கம்

பசுக்கள்பகவானின்அவதாரம்!
பசுக்கள் ஸ்ரீ தேவிகள்!
பசுக்கள் காமதேனுக்கள்!

பசுக்கள் வடிவில் உலவும் பரமாத்மாக்கள் ஏன் தங்களுககுக் தானே இந்தத் துன்பங்களை விளைவித்துக் கொள்ள வேண்டும்! எல்லாம் ஈசன் செயல்கள் தானே! அவனன்றித் தான் ஓரளவும் அசையாதே! கோயில் மாடுகளால் ஏராளமான பயிர் வகைகள் அழிந்து படுகின்றன என்று நாட்டவர்களின் நம்பிக்கைக்குப்பாத்திரமானவர்களெல்லாம் வருந்தி அறிக்கைகள் விடுமளவுக்கு பசுஅவதாரத்தினர் ஏன் மந்தமாக இருக்கின்றனர்? பசுக்கள் பகவானின் அவதாரங்களாம்! கண்ணிமை மூடித்திறப்பதற்குள் காத தூரம் பறந்துவிடும் விமானங்கள் கண்டுபிடிக்கப்படும் இந்த நூற்றாண்டில் காமதேனுவின் மகத்துவம் பற்றிப் பேசுகிறார்கள் பத்தாம் பசலிகள்! காந்தியாரின் பிரிவால் காசினியோர் கதறியழுதபோது, அந்தச் சோகப் பேரொலியை அமிழ்த்திவிடும் அளவுக்கு மகிழ்ச்சி ஆரவாரம் செய்தவர்கள்தான் இப்போது கருணை போதனை செய்கிறார்கள்; பசுக்களை பூஜைக்குறிய தெய்வங்களாக்கப் பட்டு வரும் நாட்டின் நிலையையும் அதே பசுக்களை பயன் படுத்தி வரும் வேறுநாடுகளின் நிலையையும் ஒப்பிட்டுப் பார்த்து சிந்தித்துப் பார்க்கும் திறனற்றவர்கள்.

தொட்டது துலங்கவில்லையே என்பதற்காக தொடக் கூடாததையெல்லாம் தொட்டுக் கொண்டிருந்தால் தோல்விக் கதைதான் தொடர்ந்து வரும் என்பதை அந்த இந்து ராஜ்யப் பிரியர்கள் உணரவில்லை. அரசியல் ஆக்க மன்றத்தை அநாகரீகமான முறையிலே பேசியாவது அகிலத்தோரின் கவனத்தைக் கவர முடியாதா என்று கனவு கண்டவர்களாயிற்றே அவர்கள்! ஜோதிடத்தைக் கண்டிக்கும் நேரு, மதசார்பற்ற சர்க்கார் எமது சர்க்கார் என்று பெருமை அடித்துக் கொள்ளும் நேரு பசுவதை தடை இயக்கத்திற்கு எதிராக அவர் கொண்டிருக்கும் முற்போக்குக் கருத்து தளர்வடையுமானால் அதன் பலனை அனுபவிக்க வேண்டிய பொறுப்பு நாட்டைத் தான் சாரும்.

### பொற்செல்வி

தோழியர் பொற்செல்வி இளமுருகு அம்மையார் கடந்த இரண்டுமாதமாக நோய்வாய்ப் பட்டு பெரிய குளத்தில் மணியரசு இல்லத்தில் படுக்கையில் உள்ளார்கள். குடும்ப வைத்தியரிடம் சிகிச்சைப் பெற்று வருகிறார்கள். அம்மையார் எழுந்து நடமாட இன்னும் ஓர் திங்கள் பிடிக்குமென்று வைத்தியர் கூறுகிறார். தோழர் மீ. சு. இளமுருகு அவர்களும் பெரிய குளத்தில்தான் இருக்கிறார்கள்.

★

### சி. பி. சிற்றரசு

தோழர் சிற்றரசு இன்று (4—11—54) பெங்களூர் விக்டோரியா ஆஸ்பத்திரியில் சேர்க்கப்பட்டு வயிற்றை எக்ஸ்ரே எடுத்தும் வயிற்று நீரை எடுத்து பரிசோதிக்கப் பட்டும் வருகிறார். அவரை பெங்களூர் தி. மு. க தோழர்கள் அடிக்கடி சென்று கவனித்துக் கொண்டு வருகின்றார்கள். அஞ்சல் எழுத விரும்பும் தோழர்கள்
சி. பி. சிற்றரசு
மேல்பார்வை எஸ். வி. பதி
53 புதுகவாசிபாளையம்
எக்ஸ்டேன்ஷன் பெங்களூர் 2.
என்ற முகவரிக்கு எழுதவும்.

★

### ப கண்ணன்

ஜலகண்டபுரம் 'பகுத்தறிவு' ஆசிரியர் தோழர் ப. கண்ணன் அவர்கள் இரணியா என்ற நோயால் பாதிக்கப்பட்டு சிகிச்சைக்காக வேலூர் மருத்துவ சாலைக்குச் சென்றிருந்தார். 20 நாட்கள் படுக்கையிலிருந்து அறுவை சிகிச்சை முடிந்தபின்பு குணம் பெற்று, சென்றவாரம் ஊர் சேர்ந்திருக்கிறார். கண்ணன் அவர்கள் இன்னும் இரண்டு மாதங்களுக்கு எந்தவித பொதுக் கூட்டங்களிலும் கலந்து கொள்ள இயலாத நிலையிலிருக்கிறார்.

**கருணாநிதி**
**நவம்பர் நிகழ்ச்சிகள்**
★
" 14-அண்ணாமலை நகர்
" 21-சேலம்
" 28-மதுரை
" 29-உசிலம்பட்டி





# நாடாண்ட மன்னன் நாதியற்று செத்தான்!

ராம லக்குமணர், சீதை மூவரும் கானகத்தில் தங்கள் வாழ்க்கையைத் துவங்கிவிட்டனர். இங்கே அயோத்தியில், தசரதன் புத்திரசோகத்தில் புழுவாய்த் துடிக்கிறான். அந்த சமயத்தில் அவனருகே இருப்பது கௌசல்யை என்றும் ஆச்சாரியார் குறிப்பிடுகிறார்.

அரசன் இன்னது செய்வது என்று தெரியாமல் தத்தளித்து அரை ஜீவனாக இருக்கும் சமயத்தில் கௌசல்யை தனக்குத் தோன்றிய நியாயத்தை யெல்லாம் சோல்லித் தசரதனுடைய குற்றத்தை வெகு கடுமையான முறையில் குத்திக் குத்திக் காட்டிப் பேசினாள்.

கௌசல்யாவின் பதிபக்தி எத்தன்மைத் தூய்மையுடையதாயிருக்கிறது பாருங்கள். உயிருக்கே மன்றாடி, அரை ஜீவனாகக் கிடக்கிறானும் மன்னன். வெகு கடுமையாக குத்திப் பேசினளாம் கௌசல்யாதேவி! ராமனின் தாயார். அது மட்டுமா?—மகனை காட்டுக்கு அனுப்பிவிட்டு மணாளனையும் மரணப் படுக்கையிலே காணும் அந்தக் கற்புக்கரசி (?) கணவனிடம் என்ன சொல்லிப் புலம்புகிறாள்; ஆச்சாரியாரே எழுதியிருக்கிறார் படியுங்கள்.

"எனக்கு யார் கதி? ஸ்த்ரீக்குப் புருஷன்தான் கதி. நான்பேற்ற புருஷனோ வேறு மனைவியுடன் சேர்ந்து கோண்டு என்னைக் கைவிட்டு விட்டான். என் மகனோ காட்டுக்குப் போய் விட்டான். என் பிறந்தகத்துப் பந்துக்கள் தூர தேசத்தில இருக்கிறார்கள், புருஷன் உயிரோடிருக்க அங்கே போய் நான் எப்படிப் பந்துக்களை அண்டிப் பிழைக்க முடியும்? நிர்க்கதியாக நிற்கிறேன். உமக்கு இதைப் பற்றி யெல்லாம் என்ன கவலை?"

தன்னைப் பற்றியே கவலைப் பட்டுக் கொள்ளும் தர்மபத்தினி கௌசல்யா தேவி, கைகேயியை விட எந்த விதத்தில் உயர்ந்தவள் என்று ராமாயணக் கதையையே ஆதாரமாக வைத்துக் கேட்கிறேன். பந்துக்கள் வீட்டில் போய் அண்டிப் பிழைக்கலாமென்றால், அதற்கும் கணவன் உயிரோடிருந்து தொலைகிறானே என்று ஒரு ராஜபத்தினி புலம்புகிறாள் என்றால், அவளது பண்பின் அளவு எத்தகையது என்பதை இயம்பவும் வேண்டுமோ?

தசரதனோ, புத்திர சோகத்தால் தான் வருந்துவதற்குக் காரணம் இளம் வயதில் தனக்குக் கிடைத்த சாபமே என உறுதியாக எண்ணுகிறான்.

ஓசை கேட்டு அம்பு எய்வதிலே அவன் வல்லவனும். வாலிப வயதில் ஒரு நாள் வனாந்திரப் பகுதியில் ஒருவன் குடத்தில் தண்ணீர் முகப்பதை யானை நீர் குடிக்கும் ஓசை யெனக் கருதி அம்பு பூட்டினான். அந்த அம்பு மனிதனைக் கொல்லவே. அந்த மனிதனின் பெற்றோர் அம்பெய்த தசரதனும் புத்திர சோகத்தால் வருந்துக என சாபமிட்டு செத்தனராம். ஆகவே தசரதனது வாட்டத்திற்குக் காரணம் கைகேயி அல்ல; இளமையிற் பெற்ற சாபமே— என்பதும் தெளிவாகிவிட்டது. ஓசையைக் கேட்டு அம்பெய்து வெல்லக் கூடிய அத்துணை சிறப்புடைய வீரன் தசரதனுக்குத் தான், ஒரு போர்க் களத்திலே கைகேயியின் துணை அத்யவாசியமாகப் போய்விட்டது! பாவம்; அவனால் ஓசையைத்தான் கேட்க முடியுமே தவிர; அந்த ஓசை யானையின் ஓசையா?—தண்ணீர் முகக்கும் பானையின் ஓசையா?- என்று கண்டுபிடிக்கத் தெரியாது போலும்! பால்யத்தில் தான் பெற்ற சாபத்தின் சாயலே இந்த சங்கடம் என்ற கதையை கௌசல்யாவிடத்திலே அவன் சொல்லிக் கொண்டிருக்கும் போதே,

"மார்பு அடைக்கிறது! இனி ஏதும் மிச்சமில்லை. கௌசல்யே! நீ என் கண்களுக்குத் தெரியவில்லை. மரணம் நெருங்குகிறது—அருகில் வா! விளக்கில் எண்ணெய் வற்றிப் போயிற்று — கௌசல்யே! சுமித்ரே!" எனக்கூறினான். வர வர பேச்சு அடங்கிப் போய் அன்றிரவே உயிர் நீத்தான் அரசன்.

இதையும் ஆச்சாரியார் விபரமாக எழுதியிருக்கிறார். இன்னும் ஒரு வேதனையான வேடிக்கையையும் எழுதியிருக்கிறார், பாருங்கள்.

உயிர் நீத்த விஷயம் பக்கத்திலிருந்த கௌசல்யை, சுமித்திரைக்குக் கூடத் தெரிவில்லை.

காரணம் என்னவாம்? கூறுகிறார், படியுங்கள்.

சோகத்தாலும், கண் விழித்த களைப்பாலும், அந்தப் புரத்தில் ஒரு மூலையில் அயர்ந்து கிடந்தார்கள்.

மணவாளன், "மரணம் நெருங்கிவிட்டது—எல்லோரும் அருகே வாருங்கள் — கௌசல்யே! சுமித்ரே! விளக்கில் எண்ணெய் வற்றிவிட்டது!" என்று கதறியிருக்கிறான். பேச்சும் வர வர அடங்கிவிட்டது- என்று அவனது மரணப்படுக்கையின் இறுதிக் கட்டம் வர்ணிக்கப்படுகிறது. அந்த வேதனைப் படலத்தின் போது, கௌசல்யா தேவியும், சுமித்ராதேவியும் கண்விழித்த களைப்பால் அயர்ந்து போய்விட்டார்களாம்! தசரதன் அறுபதினாயிரவரும் கொண்ட தசரத மகாராஜன்-இரவு வெகு நேரம் வரையிலே, யாரும் கவனிக்காத அளவுக்கு பிணமாகக் கிடந்தான் என்பது பரிதாபத்திற்குரிய விஷயம்தான். இப்படி பல மனைவிகளை கட்டிக் கொள்வதிலே வருகிற ஆபத்தே இது தான்!

மூத்தவள் கவனிப்பாள் என்று இளையவள் தூங்க—இளையவள் கவனிப்பாள் என்று அடுத்தவள் தூங்க—இப்படி அன்பு மனைவிகள் அனைவரும் அரசனின் மரணப்படுக்கையருகே போட்டி போட்டுக் கொண்டு தூங்கியதால் தானே அவன் தூங்க ஆரம்பித்த நீண்ட தூக்கத்தை யாரும் கவனிக்க முடியாமற்போயிற்று!

உயிர் பிரிந்த உடனே—திறந்திருக்கும் கண்களை மூடி வைக்கவும், அந்த தேசாதிபதியின் பக்கத்தே ஆளில்லாமல் போய்விட்டது, பாவம்!—கடைசி மூச்சு பிரிவதற்குள் பால் வார்க்கும் சடங்கு நடத்தி வைக்கக்கூட அந்தப் பார் ஆண்ட பார்த்திபனுக்கு நாதியில்லாமல் ஆகிவிட்டது! ஆயிரக்கணக்கிலே மனைவியர்-இறுதி மூச்சுவிடும் போது அவர்களில் ஒருவர் மடியிலாவது மன்னவனுக்கு இடம் கிடைக்காது போய்விட்டது-அப்படி அயர்ந்து தூங்கி விட்டனர். அக்கால ஆரியப் பண்பு போலும் அது! தூக்கத்திலே மிகவும் திறமைசாலிகள் போலும் அயோத்தி ஆரணங்குகள்! அயோத்தியென்ன: மிதிலையின் மின்னல் கொடியாள் சீதாதேவிகூட, இந்திரன் மகன் சயந்தன் காக்கை உருவில் தன் யாக்கையைக்கொத்தியபோதும், குருதிவழிந்தபோதும், எழாமல் தூங்கிக் கொண்டிருந்த திறமைசாலியாயிற்றே! கற்பின் திருவுருவமாயிற்றே! எப்படியோ ஒருவிதமாக, தசரத மகாராஜன் மாண்டுவிட்டான். புலன்களை அடக்கியாளும் திறமை பெற்றவன் என்று வால்மீகியால் புகழப்பட்டவனும் தசரதன். ராமாயண ஆரம்பத்திலேயே முனிவர், தசரதனைப்பற்றிய இப்படிக் குறிப்பு எழுதியிருக்கிறாராம், ஆச்சாரியார் கூறுகிறார். புலன்களை அடக்கியாளும் திறமை பெற்றவனுக்குத்தான் 'அறுபதாயிரம்' தேவைப்பட்டிருக்கிறது!

இன்பகேளிக்கை ஒன்றுக்காக மட்டுமே, இளைய மனைவி கைகேயி இருந்தாள். ராமனுக்கு

★ 10-ம் பக்கம் பார்க்க

சக்கரவர்த்தியின்
**திருமகன்**
மூக்காஜி

# புலனடக்கியவனா? போக பூபதியா?

உயிர் நீத்த விஷயம் பொழுது விடியும் வரையில் அவர்கட்குத் தெரியாதாம்! பொழுது விடிந்த பிறகும் எப்படித் தெரிகிறது? ஆச்சாரியாரே அதையும் எழுதியிருக்கிறார்; பாருங்கள்!

பொழுது விடியும் காலத்தில் சூதகமாகத காயகர்கள் அந்தப் புர வாயிலில் வழக்கம்போல்கூடி அவரவர்களுடைய கிரமப்படி அரசனை எழுப்ப—சுப்பிரபாதம் பாடவும், வாத்தியம் வாசிக்கவும் செய்தார்கள். அரசன் எழுந்ததாகக் காணவில்லை. பணியாட்கள் வெகு நேரம் காத்திருந்துவிட்டு, 'இன்று அரசர் ஏன் இன்னும் எழவில்லை' என்ற சந்தேகத்துடன் உள்ளே பிரவேசித்தார்கள். அரசன் உயிரற்றுக் கிடப்பதைக் கண்டார்கள். பிறகு அரண்மனை முழுதும் விஷயம் தெரிந்து ஒரே துயரக்கடலாயிற்று.

அயோத்திவேந்தன்—பட்டத்தரசி மூவரும், ஆசை சரசிகள்

# புதையல்

இராசன்

## ராம தூதன்

### 13

துக்காராமும் அம்பலமும் வாய்க்காலின் ஓரமாக வுள்ள ஒரு கூறை வீட்டை அடைந்தனர். தோட்டம் சூழ்ந்த அந்த வீட்டை சுற்றிச் சுற்றிப் பார்த்தான் துக்காராம். அவனுக்கு எண்ணம், ஒரு வேளை இதுதான் பரிமளாவின் வீடோ என்று! முதலில் அம்பலம் வீட்டுக்குள்ளே நுழைந்தார். "டேய் ராமா!" என்று சப்தம் கொடுத்தார். பதறி அடித்துக்கொண்டு ஓடி வந்தான் ஒரு அசடு வழியும் வேலைக்காரப் பையன். அவன் வந்த வேகத்தில் அம்பலத்தின் மீது முட்டிக் கொள்வான் போலிருந்தது. குள்ளமான உருவமும், இளித்துக் கொண்டேயிருக்கும் வாயும், ஆடிக் கொண்டேயிருக்கும் தலையும் அந்த வேலைக்கார ராமனின் தனி லக்ஷணங்கள். உத்திரவுக்காக காத்து நின்ற அவனிடம், அம்பலம்—"என்னடா விசேஷம்?" என்று கேட்டார். "விசேஷம் என்னங்க......நீங்கதான் சொல்லணும்" என்று ராமன் இளித்தான். "அடக்கழுதை! என்னையே திருப்பி கேக்கிறியா? டேய்-இந்தபாரு-இந்த அய்யா வெளியூருக்காரரு!"

"பாத்தாலே தெரியுதுங்க எஜமான்!"

"நம்ப வீட்டு விருந்தாளியா வந்திருக்காரு — அவரை ஒழுங்கா கவனிச்சுக்க! அவருக்கு என்னென்ன வேணுமோ......"

"சரிங்க..." என்று ராமன் இளித்தான். அம்பலம் துக்காராமை உபசரித்து, உள்ளேயுள்ள பலகையில் உட்கார வைத்து, தானும் கொட்டாவி விட்டபடி அங்குள்ள சாய்வு நாற்காலியில் சாய்ந்தார்.

"என்ன, வீட்டில்நீங்க மாத்திரம்தான் தனியா!" என்று ஏதோ கேட்க ஆரம்பித்த துக்காராமிடம் அம்பலம், "இல்லே இல்லே! வீடெல்லாம் ஊருக்குள்ளேயிருக்கிறது. இது நமக்கு தனி பங்களா மாதிரி— இங்கேயிருந்து எனக்கு வயல் வெளி தோட்டம் துரவு கவனிக்க ரொம்ப சௌகரியம் அதனாலே-இங்கே ஒண்ணு கட்டிப்போட்டேன்" என்றுபதில் கூறினார்.

"அவுங்க வீடெல்லாம் ரொம்ப எட்டியாக்கும்!"

"ஓ-தம்பிக்கு அவசரம்போல இருக்கு!-அவுங்க வீடு கொஞ்சம் எட்டித்தான் இருக்கு... தம்பி!—அவசரப்பட்டு அந்தப் பக்கம் போயிட வேண்டாம்—ஏன்னு; அவுங்க அப்பன் கொஞ்சம் முரடன். இந்தக் காதல், கீதல் எல்லாம் அவனுக்கு ஒரு மண்ணுங் கட்டியும் புரியாது!"

"பார்த்தீங்களா! உலகத்திலே காதல் சரியாக பரவாதனால் எவ்வளவு சங்கடம் வருகிறது? அதனால்தான் என்னுடைய புஸ்தகத்திலே எழுதியிருக்கிறேன்; கடலில் உள்ள மீனுக்கும், காட்டில் உள்ள மானுக்கும், தேன் குடிக்கும் வண்டுக்கும், வயல் நண்டுக்கும் காதல் வழங்கியகடவுளே! மனித ஜாதிக்கு அதை வழங்காமல் அதற்குள் உன் கடையை என் மூடிவிட்டாய்? எப்படி என் கருத்து என்று நினைக்கிறீங்க!"

"நல்லாயிருக்கு தம்பி! நீங்க சொந்தமாகவே இதை எழுதுனீங்களா? இல்லே..."

"பல ஆராய்ச்சி செய்து எழுதியிருக்கிறேனாக்கும். பழைய காலத்து கல்வெட்டுன்னு கேள்விப்பட்டதில்லியா?

சாக்ரடீஸ்என்றேஒருமனிதர். இந்தியாவுக்கு வந்து அகத்தியரோடு பேசிக் கொண்டிருக்கும் போது. அகத்தியர் காதலைப் பற்றி இப்படிச் சொல்லியிருக்கிறார். அந்த வார்த்தைகளை கல்லிலே செதுக்கி வச்சிருக்காங்க!—அதுவும் அராபி பாஷையிலே!—அதைத் தேடிப் பிடிச்சு கொண்டாந்து, நம்ப கதையிலே சேத்தேன்!"

துக்காராமின் பேச்சினிடையே, ராமன் குறுக்கிட்டு— "என்னங்க. நண்டும் வண்டும் தேடிப்பிடிக்க அகத்தியூரு வரையிலும் போய் அலைந்திருக்கிங்க — எனக்கிட்ட சொன்னா கூட, நம்ப வயக்காட்டிலே பிடிச்சாந்து தருவேனே!"

"அய்யோ—இது காதல் நண்டப்பா?"

"கிராமத்திலே கிடைக்காதாக்கும்!"

"ஏன் கிடைக்காது! காதலுக்கு கிராமம், நகரம் என்ற பேதம் ஏது?—காதல் என்பது ஒரு ரோடு ரோலர்! மேட்டையும் பள்ளத்தையும் சமப்படுத்தும் சமதர் மதத்துவம் தான் காதல்—அதற்கு கிராமம், நகரம் என்று வித்தியாசமே கிடையாது!"

"ஓ அப்படீங்களா?"

"பாவம் உனக்கு இதெல்லாம் தெரியவில்லை, உனக்கு மட்டுமா? உலகத்துக்கே இந்த அரிய விஷயங்கள் தெரிய வேண்டுமானால், என்னுடைய புத்தகம் அச்சுவாகனம் ஏற வேண்டும்—"

என்று தனக்குள்ளாகவே மிகுந்த கவலைப்பட்டுக் கொண்டான் துக்காராம். ராமனும் துக்காராமும் பேசிக்கொண்டிருக்கும் போது எங்கேயோ நீண்ட சிந்தனையில் இருந்த அம்பலம், திடீரென எழுந்து-"ஏ,ராமா! போடா வெளியே!" என்றார். ராமன், வெளியே மாயமாய்ப் பறந்து விட்டான். துக்காராமுக்கு ஒன்றும் புரியவில்லை. விழித்தான், அவனைப் பார்த்து அம்பலம்;

"தம்பி!—கொஞ்சம் இருங்க — நான்போய் பரிமளாவிடம் நீங்க வந்திருக்கிற விஷயத்தை சொல்லிவிட்டு வந்துடுறேன்—" என்றார்.

வேண்டாமென்று கூறுவானா துக்காராம்! 'சரிசரி' என்று ஆமோதித்துக் கொண்டே எழுந்தான். 'ராமன் இருப்பான் இங்கே— ...கொஞ்ச நேரத்திலே வந்து விடுறேன்' என்று அம்பலம் அதைவிட்டுப் புறப்பட்டார், போகும் பொழுது அவர் ராமனைத் தனியாகக் கூப்பிட்டு, "ஏ பயலே! அவரை ஜாக்கிரதையா கவனிச்சுக்க—எங்கயும் அவர் போகாம பாத்துக்க—" என்று உஷார் படுத்திவிட்டு கிளம்பினார், ராமனும் துக்காராமுக்கு பேச்சுத் துணையாக வந்து சேர்ந்தான்.

* * *

அம்பலம், நேராக பரிமளாவின் வீட்டுக்கு நடந்தார். நடக்கும் போதே பலவித எண்ணக் குழப்பங்கள் அவரைப் படாதபாடுபடுத்தின. எப்படியும், துக்காராமின் மூலமாக தங்கம் புதைக்கப்பட்ட இடத்தை தெரிந்து கொள்ள வேண்டும் என்ற உறுதியான முடிவு மாத்திரம் அவருக்கு உற்சாக மூட்டிக் கொண்டேயிருந்தது—பரிமளாவைப் பார்த்து அவளிடம் அவளது காதலன் வத்திருக்கிறான் என்று சொன்னால் அவள் என்ன நினைப்பாள்? தன் வார்த்தையை நம்பி, அவள் தன் வீட்டுக்கு வருவாளா? அப்படியே வந்தால்தான் துக்காராமிடமிருந்துதான் ரகசியத்தைப் பெறுவதற்கு அவள் எப்படித் துணை செய்ய முடியும்? அவள் வராவிட்டால் துக்காராம் தன்னை நம்பாமல் போய்விடக் கூடுமே!பரிமளாவுக்காகத்தான் அவனை அழைத்து வந்திருக்கிறேன் என்று என் மீது அவன் நல்ல அபிப்பிராயம் வைக்க வழி என்ன? என்றெல்லாம் யோசித்துக் கொண்டே போனார் அம்பலம்.

அவருடைய இந்த யோசனைகளை யெல்லாம் தரை மட்டமாக்குவது போல அவருக்கு செய்தி கிடைத்தது, அவர் பரிமளாவின் வீட்டில் நுழைந்ததும்!

தாண்டவன் கோபாவேசமாக நின்று கொண்டிருந்தார். அங்கே அம்பலம் விஷயத்தை விசாரித்தார். அன்றிரவு தூக்கிச் செல்லப்பட்ட பரிமளா, திரும்ப வீட்டுக்கே வரவில்லை என்பதைப் புரிந்துகொண்டார்.

"யார்தான் தூக்கிப் போயிருக்க முடியும்?" என்று தெரியாதவர் போல கேட்டார்.

"வேறு யார்? எல்லாம் அவளுடைய கள்ள புருஷனாய்த்தானிருக்கும். இங்கேயிருந்தால் செத்து விடுவோம், என்று பயந்து அவனோடு ஓடிவிட்டாள் மானங்கெட்ட பெண்! அன்னைக்கு மாத்திரம்; நான் மட்டும், ஒரு நிமிஷம் முந்தியிருந்தா—அவளைத் துண்டு துண்டா வெட்டிப் போட்டிருப்பேன்?" என்று பற்களைக் கடித்துக் கொண்டார் தாண்டவன்.

"காரியத்தை இவ்வளவு தூரம் வளர்த்துட்டீங்களே— இப்ப, பரிமளாவைத் தேட வேண்டாமா?" —என்று அம்பலம் கேட்டார்.

"போலீசிலே ரிப்போர்ட்டு பண்ணி தேடுவேன்னு நினைக்க வேண்டாம்-அதுதான் இந்தத் தாண்டவங்கிட்ட நடக்காது! நானே தேடுவேன்-நானே கண்டுபிடிப்பேன் — நானே அவுங்களை கண்ட துண்டமா நறுக்குவேன்-வந்த அவமானம் வந்தாச்சு! இனிமே என்ன ஆனா என்ன!"

அம்பலத்தின் மூளை வேலை செய்தது-பரிமளா காணுமற்போய்விட்ட சேதி ஊரில் பரவினால், அது துக்காராமுக்குத் தெரிந்து, அவனும் ஓடிவிடுவானே என்று பயந்தார். அதனால் அவர் தாண்டவனிடம் தந்திரமாகப் பேசினார்.

"பரிமளா, காணுமற்போன சேதி யாருக்கும் தெரிய வேண்டாம். அவள் பட்டுக் கோட்டையில் இருப்பதாகவே ஊரில் கூறிவிடுவோம்-அவளை தேடும் வேலையை ரகசியமாகவே செய்வோம்—இல்லாவிட்டால் ஊரில் கேவலமாகப் பேசுவார்கள்!"

தாண்டவனும் அம்பலத்தின் பேச்சுக்கு தலையசைத்தார். ஆனாலும், அவரது ஆத்திரம் அடங்கிக்கொள்ளாததாயிருந்தது. தன்னுடைய பரம்பரையிலேயே இல்லாத பயங்கரமான களங்கம் இப்போது தன்னை பற்றிக் கொண்டதாக எண்ணிக் குமுறினார். அம்பலமோ பரிமளா எங்குதான் போயிருப்பாள்?" என்ற சிந்தனையுடன் திரும்பினார். ஒருவேளை, அந்தப் போலீஸ்காரர்கள் கையில் சிக்கியிருப்பாளோ — அப்படி சிக்கியிருந்தாலும், போலீஸ்காரர்கள் அந்தச் செய்தியை உடனே வெளியிட்டிருப்பார்களே—இது என்ன; ஒரே மர்மமாயிருக்கிறது — என்று தன்னைத் தானே கேட்டுக் கொண்டார். இப்போது,துக்காராமுக்கு என்ன பதில் சொல்வது? அது வேறு பிரச்சினை!

துக்காராம் பார்வைக்கு அசடு போலத்தான் தெரிகிறான் ஆனாலும், தங்கம் இருக்கும் இடத்தை அவ்வளவு சுலபமாக சொல்லிவிடுவானா? அடக் கடவுளே! இந்த அசடனிடம் போய், அவ்வளவு பெரிய அந்தரங்கம் சிக்கிக் கொண்டிருக்கிறதே! என்றெல்லாம் நினைந்து கொண்டார் அம்பலம். அவனைச் சந்தோஷப்படுத்தியே காரியத்தை சாதிக்க வேண்டும் என்று மாத்திரம் அவர் முடிவு கட்டிக் கொண்டார். கடைசி காலத்தில் வேண்டுமானால்— கத்தியைக் காட்டி, காரியத்தை சாதிக்கலாம் என்றும் நீர் மானித்துக் கொண்டார். சந்தோஷமாக காரியத்தை சாதிக்க பரிமளா ஊரில் இருந்தால் பரவாயில்லை -அவளோ காணப்படவில்லை-இப்போது பரிமளா ஊரில் இருந்தால்தான் துக்காராமை, இரண்டு நாள் தங்க வைக்க முடியும்-இந்தக் குழப்பத்தின் இறுதியில் அம்பலம் ஒரு நல்ல தீர்மானத்திற்கு வந்தவர் போல, பரபரப்பாக நடந்தார்—வீட்டுக்குள் நுழையாமல் வெளியே வாசலில் நின்றபடியே 'ராமா!" என்று கூப்பிட்டார். அவனும் ஓடி வந்தான். அவன் பின்னே; துக்காராமும் வந்து எட்டிப் பார்த்தான். அம்பலம் அவனிடம்; "தம்பி! பழம் தான்!— கொஞ்சம் இருங்க—இதோ வந்து விடுகிறேன்" என்றுகூறி ராமனை அழைத்துக்கொண்டு வயல் பக்கமாகப் போகத் தொடங்கினார்.

ராமன், என்றைக்கு மில்லாமல் எஜமான் தன்னை தனியாக அழைத்துப் போக காரணம் புரியாமல், கைகட்டியபடி பின்னே சென்றான், அம்பலம் ராமனிம் பேச ஆரம்பித்தார்.

"ராமா! நீ ஒரு காரியம் செய்ய வேண்டும்!"

"சரிங்க!"

"கெட்டிக்காரத்தனமா செய்வாயா?"

"ஏங்க செய்யமாட்டேன்— என்னமோ; அண்ணைக்கு ஒருநாளு, தவறிப்போயி; நம்ப வீட்டுக்கு வந்த அய்யருசாமியைப் பார்த்து, தண்ணி சாப்பிடுறீங்களான்னு கேட்கிறத்துக்கு பதிலா, தண்ணி, போடுறீங்களான்னு கேட்டுட்டேன்—அவ்வளவு தானுங்களே!"

"எய்-அதெல்லாம் போகட்டும்—பட்டுக்கோட்டை ஆள் வந்திருக்குதே!"

"ஆமாம்—என் பக்தன்!"

"என்னது?"

"ஆமாங்க—ராமபக்தன் தானே துக்காராம்!"

"போடா கழுதை! — நான் சொல்றதைக் கேளுடா! — அந்த துக்காராம் இருக்கானே, அவனுக்கு நம்ப தாண்டவன் மகள் பரிமளா மேலே காதல்!"

"சரிங்க — நடக்கட்டும்!"

"என்னடா நடக்கட்டும்?-"

"காதல்!"

"அது ஒண்ணும் நடக்கலே!"

"ஓடுதுங்களா?"

"ஓடிட்டுது!—ஏ, கழுதை! அந்தப் பரிமளா எங்கேயோ ஓடிவிட்டாள். நான், இவனை ஒரு முக்கியமான காரியத்துக்காக அழைச்சிகிட்டு வந்திருக்கேன்—என்ன தெரியுமா? — பரிமளாவும் துக்காராமும்..."

"அய்யய்யயயே! — உங்களுக்கு என் எஜமான் இந்த வேலே எல்லாம்—அவுங்க எப்படியோ போறுங்க—"

"சீ!—அவுங்களை ஒண்ணும் நான் ஜோடி சேர்க்கப் போவதில்லேடா!—பரிமளா இங்க இருக்கிறதா சொல்லி இவனை அழைச்சுட்டு வந்துட்டேன்— அவள் இங்க இல்லே! அதனாலே நீ என்ன செய்யணும்னா?..."

'சொல்லுங்க செய்றேன்!"

"பரிமளா, வீட்ல இருக்கிற மாதிரியும், நீ அவளுகிட்ட இருந்து தூது வர்ர மாதிரியும் இந்த துக்காராமுகிட்ட நடந்துக்கணும்!"

"சரிங்க!"

"இப்ப, நான் அவனுக்கு நேரா, உன்னை பரிமளா வீட்டுக்குபோய்விட்டுவான்னு அனுப்புவேன். நீ போற மாதிரி போயி, கொஞ்சநேரம் கழித்து திரும்பிவந்து, பரிமளா சேதி சொன்னது மாதிரி சொல்லணும்-"

"ஆகட்டுங்க!"

"என்ன சொன்னாள் என்று சொல்லுவே?"

"காதலரே—பிராண நாதா!- பிரிய புருஷா! — உங்களைக் காணாமல் என் கண்கள் கெடிகாரத்தின் பெண்டுலம் போல இங்கும் அங்கும் ஆடுகிறதே!"

"டே டே — சபாஷ்' — இதெல்லாம் எங்க படிச்சே?"

"படிக்கணுங்களா? — அல்லி அர்ஜுனா தெருக் கூத்து பாத்தா போறுதுங்களா?— அதோட, துக்காராம் வேற இத்தனை நாழி இதானே பேசிகிட்டு இருந்தாரு!"

"சரி—சரி—வா! பரிமளா, சொன்னதாகச் சொல்லு அவனிடம்; வீட்ல அப்பா அம்மா, உத்திரவு பயங்கரமாயிருப்பதால, நேரா சந்திக்கிறதுகஷ்டமாயிருக்குன்னு அவள் சொன்னதாகச் சொல்லு!"

"சரிங்க—இனிமே எல்லாம் நான் பாத்துக்கிறேன்"

அம்பலம் ராமனின் முதுகில் தட்டிக் கொடுத்தபடி வீட்டுக்கு திரும்பினார்.

துக்காராம் வாசலில் நின்றபடியே அம்பலத்தின் வருகையை எதிர்பார்த்து இருந்தான்.

"தம்பி! பரிமளா, வீட்லதான் இருக்குது!—அவுங்க அப்பனோட கட்டுப்பாடு ரொம்ப அதிகம்! அதனால நான் ஜாஸ்தி பேசமுடியிலே-நீங்க வந்திருக்கிற விஷயத்தை மட்டும் ஜாடையாச் சொன்னேன் — நீங்க ஏதாவது சேதி சொல்லி அனுப்ப வேண்டுமானால், இதோ ராமனை ஏற்பாடுபண்ணியிருக்கேன்—அவனிடம் சேதி அனுப்புங்கள்"

என்று அம்பலம்கூறி விட்டு வீட்டுக்குள்ளே போய் விட்டார்.

துக்காராம், ராமனை பரிவோடும், புதிய பாசத்தோடும் பார்த்துக் கொண்டே அவனிடம் நெருங்கினான்.

"என்னராமா! போய்வருகிறாயா?"

"உத்திரவு கொடுங்கள்— இந்த ராமன், அனுமாரைப் போல தூது போய் வருவான்" என்று மண்டியிட்டு அமர்ந்து கொண்டான் ராமன்.

துக்காராம், தன்காதலிக்கு சேதி அனுப்பினான்.

"இதை அவளிடம் சொல் ராமா!—அவளைப் பிரிந்தது முதல் அன்ன ஆகாரமின்றிக் கிடக்கிறேன் என்று சொல்!"

"ஊஹூம்—நான் பொய் சொல்லமாட்டேன் — இப்பத்தானே; இரண்டு சட்டி சோறு என் கையாலேயே போட்டேன் உங்களுக்கு"

"ராமா!-அவளை எப்போது பார்க்கலாம்?-எங்கே பார்க்கலாம்?-என்று கேள்-பார்க்க முடியாவிட்டால்; அவளிடம் ஒரு முத்தமாவது வாங்கி வா!"

'செய்கிறேன் - செய்கிறேன்' என்று கூறிவிட்டு ராமன் ஓட்டம் பிடித்தான்.

[ வளரும் ]

## புதுவிலங்கு, பொன்விலங்கு!

*

"சுமார் 250 ஆண்டுகளாக இங்கு நிலை பெற்று வந்த பிரெஞ்சு ஏகாதிபத்தியம், இன்று நம்மை விட்டு அகல்கின்றது! நமது இலட்சியத்தின் குறுக்கே நின்ற ஒரு பெருந் தொல்லை இன்றோடு நீங்குகிறது! அதற்காக, நாம் நமது மகிழ்ச்சியை அறிவித்துக் கொள்ளுவோம்!

ஆனால்......?

பிரஞ்சு ஆட்சி நீங்கிற்று! இந்தியாவோடு இணைக்கப் பட்டோம்! இதனால், நம் அடிமை நிலை முற்றும் தீர்ந்து விட்டதா?

நம் கைகளைப் பிணைத்திருந்த இரும்பு விலங்கு தகர்க்கப்பட்டது! பதிலுக்குப் பொன்விலங்கு பூட்டப்படுகிறது இன்று! இவ்விலங்கு, பொன்னால் (இந்திய ஆட்சியாக) இருப்பதுகண்டு பலர் பூரிப்படையலாம்; மகிழ்ச்சியுறலாம்! ஆனால், நம் உரிமைக்கரங்களைப் பிணைத்திருப்பது பொன்விலங்கேயாயினும், அதனை உடைத்தெறிய வேண்டிய கடமை நமக்குண்டு என்பதை நாம் மறந்து விடவில்லை.

சட்டபூர்வமான மாற்றத்துக்குப்பின், வட நாட்டு ஏகாதிபத்தியத்தின் சுயரூபம், இங்குள்ளோர்களுக்குப் புலனாகும்! பிரெஞ்சு ஆட்சியில் நடைபெற்ற தீமைகளைத் தோற்கடிக்கும் வகையில், மக்கள் நடத்தப்படப் போவதும் விளங்கும்!

நமது வருங்காலம், சென்னை மாகாணத் தமிழர் நிலையோடு இணைக்கப்படப் போவது நிச்சயம்! அப்போது நம் கடமை என்ன? வடநாட்டு ஏகாதிபத்தியப் பொன் விலங்கை உடைத்தெறியும் வலிமை, நம்நாட்டில் பிறகட்சிகளுக்கில்லை. திராவிட இயக்கம் ஒன்றுதான், தென்னாட்டுமக்களின் கரங்களுக்கு விடுதலையளிப்பதாகும். ஆகவே, வடநாட்டுக் கொள்ளையர்களிடமிருந்து நாம் விடுதலைபெற, இங்கு திராவிட இயக்கத்தை வலுப்பெறச் செய்யவேண்டும். அதன் மூலம் தலைமைக் கழகங்களோடு தொடர்புகொண்டு. திராவிட நாட்டைப் பெற்று, சுதந்தர சமதர்மக் குடியாட்சியை நிலைபெறச் செய்ய வேண்டும்."

புதுவை தி. மு. க.

# கேள்வியும் பதிலும்-ஒரு விளக்கம்!

[குடந்தையில் அச்சியற்றித்தரப்பட்ட நீண்ட கேள்வித்தாள் ஒன்றுக்கு தோழர் மு. கருணாநிதி 17-10-54 அன்று மாலை நடைபெற்ற கூட்டத்தில் பதில் கூறினார். கேள்வித்தாள் திராவிடக் கழகத் தோழரால் தரப்பட்டது. அவைகளில் ஒரு சில கேள்விகள் ஒரே மாதிரியான கேள்விகள். ஒன்றிரண்டு ஆபாசமானவை. பொதுமக்கள் விளக்கம் பெற வேண்டிய அவசியத்திற்கு உரியன அல்ல அந்தக் கேள்விகள். ஆயினும் எல்லாக் கேள்விகட்கும் கருணாநிதி 1-30 மணிநேரம் பதில் கூறினார். அவைகளில் முக்கியமானவைகளையும் பதிலையும் கீழே தருகிறோம் ]

**கேள்வி** கவர்னரின் கொள்ளைச் சம்பளத்தைக் குறைக்க வேண்டுமென்றும், கவர்னரே தேவையில்லையென்றும் (விடுதலையில்) தலையங்கம் எழுதிய குருசாமி அவர்கள் உங்கள் அண்ணாத்துரையின் கவர்னர் சம்பளத்தைப்பற்றிய கருத்தற்ற போராட்டப் பேச்சை திருத்திக் கொள்ளக்கூறியதற்காக, அவர் மீது கண்டபடு வசைமாரி பொழிகிறீர்களே; இதுதான் அறிஞர் கூட்டத்தின் லட்சணமா?

(பதில்) கவர்னர் சம்பளத்தைக் குறைக்க வேண்டுமென்று உண்மையிலேயே குருசாமி அவர்கள் எண்ணியிருந்தால், அண்ணா அவர்களின் போர்முறை தவறு என்று கூறவந்த குருசாமி அவர்கள், கவர்னர் சம்பளத்தைக் குறைக்க அரசியல் சட்டத்தில் இடமில்லையென்று கவர்னருக்காக வக்காலத்து வாங்க வேண்டிய அவசியமில்லையே. இந்த முரண்பாட்டைக் காணும்போது முதல் விடுதலை தலையங்கத்தை அதன் ஆசிரியர் மணியம்மாள் அவர்கள் எழுதினார்களா; அல்லது குருசாமி அவர்கள் எழுதினாரா என்ற சந்தேகமல்லவா பிறக்கிறது நமக்கு?

(கேள்வி) அய். நா. சபையில் சீனாவே நுழைய முடியாத போதுஉங்களால்நுழைய முடியுமா? பாமரரை ஏமாற்றும் உங்களுடைய இந்த "டுப்"பைக்கண்டு அரசியல் வாதிகள் எள்ளிநகைக்க மாட்டார்களா?

(பதில்) எதைக்கண்டு நகைப்பது என்பது அரசியல் வாதிகளுக்குத் தெரியும். சீனாவினால் முடியாதது உங்களால் முடியுமா என்று கேட்பதே வெட்கக்கேடான கேள்வி. விடுதலை பெற்ற சீனா, தனக்குரிய இடத்தைக் கேட்டுப் போர் புரிகிறது அய். நா. சபையில்! நாமோ, (தி. க. வையும் சேர்த்தே சொல்கிறேன்) நமது விடுதலைப் பிரச்சினையை அய். நா. சபைக்கு கொண்டு செல்வதின் மூலம் உலகப் பிரச்சினையாக இதை ஆக்க விரும்புகிறோம், ஒரு நாட்டினால் முடியாததை நாம் செய்யக்கூடாது என்று எந்த அரசியல் அகராதி கூறுகிறதோ; தெரியவில்லை.

புத்தரால் — ராமலிங்கரால்— பட்டினத்தாரால்- சித்தரால்-பல சிந்தனையாளர்களால்—செய்ய முடியாததை செய்து காட்டிய பெரியார் ராமசாமியின் பாசறையிலே பயின்றவர்கள்; முயன்றால் முடியாதது இல்லை என்ற முடிவோடுதான் காரியத்தில் இறங்க வேண்டும். பதினேழு முறை படை எடுத்த கஜினி முகம்மது களைப்படையவில்லை என்ற சரித்திரம் படித்தவர்கள்தானே நாம்! பிரச்சினை தோற்குமா ஜெயிக்குமா என்பதல்ல முக்கியம்? அந்த முயற்சியினால் என்னபயன் என சிந்திப்பதே முக்கியம். தெ. ஆப்பிரிக்காவிலே மக்கள் உரிமை கோரும் வேண்டுகோளுடன் ஸ்காட் என்ற பாதிரியார், அய். நா. சபையை எட்டினார் என்ற செய்தியை படிக்கிற நாம்; ஒரு நாட்டுவிடுதலைப்பிரச்சினை, அய். நா. செல்ல வேண்டும் என்று விரும்புவதைக் கிண்டல் செய்வது -- அரசியல் நாகரீகமல்ல! தற்கொலையாகும்!

(கேள்வி) இரட்டைக்குழல் துப்பாக்கியென்று கூறிக்கொள்ளும் நீங்கள் கருஞ் சட்டை அணியாதிருப்பது ஏன்?

(பதில்) கட்சியில் இல்லாதவரும் கருஞ்சட்டை அணிகின்றனர். ஆரம்பத்தில் கருஞ்சட்டைப்படை என துவக்கப்பட்ட இயக்கம் மாற்றப்பட்டு, எல்லோரும் கருஞ்சட்டை அணியலாம் என்ற புதிய உத்திரவு பிறந்த காரணத்தால் கட்சியின் முக்கியஸ்தர்கள் அல்லாதவரும், அனுதாபி அல்லாதவரும்கூட கருஞ்சட்டை அணிந்தனர். இதனால் வேறுபாடு தெரியாமற் போவது மட்டுமல்ல; விபரீதங்களும் ஏற்படலாம். கருஞ்சட்டை இயக்கம்—ஒரு படைவீரர் முகாமாக இருப்பதையே அந்நாளில் கூட நாம் விரும்பினோம். இது தவிர கருஞ்சட்டை மீது தி.மு.கவுக்கு எந்தவிதவெறுப்புமில்லை. இதற்கு உதாரணம் வேண்டுமானால், சேலம் மாவட்ட தி. மு. கழக செயலாளர் ஜி. பி. சோமசுந்தரம் அவர்கள் கழற்றாத கருஞ்சட்டைப் பெரியவர் என்பதை இங்கு நினைவு படுத்துகிறேன்.

(கேள்வி) பெரியார் பிறந்தநாள் விழா கொண்டாடாமல் இருப்பது ஏன்?

(பதில்) யார் சொன்னது கொண்டாடவில்லை யென்று? ஒவ்வொரு வருடமும் செப்டம்பர் 17ம் நாள் நாங்கள் கொண்டாடுகிற தி. மு. க. பிறந்த நாள் விழா, பெரியார் பிறந்த நாள் விழாதான். பெரியார்பிறந்த நாளும், தி. மு. க. பிறந்த நாளும் ஒரே நாள்தான்!— செப். 17.

(கேள்வி)பெரியார் 'பார்ப்பானே வெளியேறு!' என்றால் "பிராமணர்களே! என்னிடம் வாருங்கள்!" என்று பார்ப்பன தாசராவது ஏன்?

(பதில்) எம்மிடம் வாருங்கள் என்று நாங்கள் அழைக்கிற பார்ப்பனர்கள்-பூணூல்போட்ட புராண மேந்திய, பூசுரப் பார்ப்பனர்கள் அல்ல! பகுத்தறிவு புரியிலே நடமாடத் துணிந்து, பழமையைச் சாடும் பார்ப்பனப் பெரு மக்களையே தி. மு. கழகம் தன்னிடம் அழைக்கிறது. பார்ப்பனர்களை வெளியேறச் செய்ய வேண்டுமென்ற திட்டம்தி.மு.க. விடம் இந்நாள்வரை இல்லை. திராவிடர் கழகத்தின் பழைய நாள் திட்டங்களும் பெரியாரின் அறிக்கைகளும் கூட பார்ப்பனீயத்தை மட்டுமே கண்டிக்கக் கூடியதாயிருந்தன. அதற்கு உதாரணமாக இதோ ஒரு பழைய ஆதாரம்-கட்டாய இந்தி எதிர்ப்புப் போராட்டத்தின் போது, பெரியார் அவர்களே கையெழுத்திட்டு. 4—8—48 அன்று விடுதலையில் எழுதிய தலையங்கத்தில் காணப்படுவது, படிக்கிறேன் கேளுங்கள் —

"பார்ப்பனர்களே!உங்களுக்கு ஒரு வார்த்தை; உங்களை ஒழிக்கப் பாடுபடுகிறவர்கள் அல்ல நாங்கள். எங்களைவிட நீங்கள் உயர்ந்த பிறவி என்று எண்ணி அதற்கு ஏற்ற அமைப்புவைத்து நடத்துகிற, நடந்து வருகிற தன்மையை மாற்ற வேண்டும் என்பவர்கள்நாங்கள். இதைக் கூடாது என்று நீங்கள், அதுவும் இந்தக் காலத்தில், நினைப்பது தடுப்பது சுத்த தவறு என்பதோடு, முட்டாள்தனமான தவறு என்று கூறுவோம். நம் நாட்டில் எங்களுக்கும், உங்களுக்குமாக ஆக வேண்டிய காரியம் பல இருக்கின்றன. அநாவசியமாய் "நாமும் ஏர் உழ வேண்டிய, மண்வெட்ட வேண்டிய முதலிய நிலையில் அமர்த்தப்பட்டு விடுவோமே" என்று நீங்கள் கருதாதீர்கள், நீங்களும் நாங்களும் ஒன்று சேர்ந்து கண்ணியமான நண்பர்கள் ஆனால் ஏர் உழ வேண்டிய, மண் வெட்ட வேண்டிய, ஏன் கக்கூஸ் எடுக்க வேண்டிய வேலை கூட உங்களுக்கும் எங்களுக்கும் மாத்திரம் அல்லாமல் மனித வர்க்கத்திற்கே அவசியமில்லாத வேலையாக ஆக்கி விடலாம். நாம் இருவரும் ஒன்றானால் நாம் மனிதத் தன்மைக்கு மேம்பட்ட "தெய்வீகத் தன்மை" என்பதாகிய, நினைத்தது நினைத்தபடி போக போக்கியம், திருப்தி, மகிழ்ச்சி அடையும்படியான தன்மையை அடைந்துவிடலாம். அதை அறியாமல் உங்கள் அர்த்தமற்ற சோம்பேறி வாழ்க்கைக்காக உலக முற்போக்கை தடுத்துக் கொண்டிருந்து உங்கள் சந்ததியை, மக்களின் மாபெரும் இம்சைக்கு ஆளாக்கி வருகிறீர்கள். வட நாட்டு ஆதிக்கத்தை, வடநாட்டான் சுரண்டலை முதலில் ஒழியுங்கள். ஞானக் (பகுத்தறிவு) கலையை வளருங்கள். உண்மை நடத்துபவர்களாக ஆகுங்கள். இருவர் வாழ்வும் உயர் வாழ்வாகும்"

அதுமட்டுமல்ல; அண்மையில் நடைபெற்ற தஞ்சை மாவட்ட ஆட்சி மன்றத் தேர்தலின்போது கீவளூர் திராவிடர் கழகத் தலைவர் ராசய்யா என்பவர் காங்கிரஸ் அபேட்சகர் சுப்பிரமணிய அய்யர் என்பவரை ஆதரித்து வேலை செய்தபோது, அதைக் கண்டித்து திராவிட கழகத்தை சேர்ந்த அபேட்சகர் ஒருவரின் சார்பில் வெளியிடப்பட்ட அறிக்கைக்கு பதில் கூறுமுகத்தான் துண்டுப்பிரசுரங்கள் மூலம் வழங்கிய கருத்துக்களை கூறுகிறேன் கவனியுங்கள்.

● தொடர்ச்சி 10-ம் பக்கம்





## பிறைவானம் — பிள்ளைகள் பகுதி

# எது 'அதிர்ஷ்டம்'?

### சிங்கத் தம்பிகளே! தங்கத் தங்கைகளே!

"என்னுடைய கேள்விக்கு இன்றுவரை பதில்இல்லையே, ஏன்?" என்று கோபமாகக் கேட்டிருக்கிறான் சென்னை, அயன்புரத்துத்தம்பிகுமரன். அவன் கேட்டிருந்த கேள்வி "அதிர்ஷ்டம் என்றால் என்ன?" என்பது தான்.

திறமையால் உயர்ந்த நிலைக்கு வந்தவர்களைப் பார்த்து சிலர் 'அதிர்ஷ்டக்காரன்' என்கிறார்கள்! அது அறிவீனம்!' பொறுமை! பின்எப்படிப்பட்டவைகளைத்தான் அதிர்ஷ்டம் என்பது? நான்யோசித்தேன். உதாரணம் ஒன்று கிடைத்தது. நன்று அமைந்தது. படியுங்கள்.

* * *

டொக்... டொக்... டொக்...

ஆற்றங்கரையோரம்; அமைதியான நேரம். அப்படியானால் அது என்ன சப்தம்?

ஒரு சிற்பி — வயதான ஏழைச் சிற்பி. அவன் எதிரில் ஒரு கற்சிலை— கண்கள் மட்டும் திறக்கப்படாத அழகான சிலை. சிற்பி அதன் கண்களைத் திறக்கப் பாடுபட்டுக் கொண்டிருந்தான். அப்போது சிற்றுளியும், சுத்தியலும் எழுப்பிய சப்தம்தான் அது.

சிற்பி காரியத்தில் கண்ணாக இருந்தான். திடீரென்று ஒரு குரல் எழும்பியது. "அப்பாடா! முடியப் போகிறதப்பா சிலை! இரண்டு மாதமாக நான் பட்டபாடு நல்ல பலனைத் தரப்போகிறது! என் உழைப்பே உழைப்பு! எனக்கு என்ன பரிசு கொடுத்தாலும் அந்த உழைப்புக்கு ஈடாகவே ஆகாது"—இப்படி பெருமிதத்தோடு சொல்லிக் கொண்டது சிற்றுளி.

உடனே லேசாகச் சிரித்தது சுத்தியல். "முட்டாள் தம்பீ! என்னப்பா உளறுகிறாய்? உழைப்பு, உழைப்பு என்று துள்ளிக் குதிக்கிறாயே, அப்படி என்ன நீ உழைத்து விட்டாய்? நான் மட்டும் உன் மண்டையில் தட்டித் தட்டி என்திறமையைக் காட்டியிராவிட்டால், இந்த சிலை ஏது? அதன் அழகுதான் ஏது? அதனால் பரிசு தர வேண்டியது உனக்கல்ல தம்பி, இந்தப் பாடுபட்டவனுக்கு!"

சுத்தியல் தன் பேச்சை முடித்தது. அடுத்தகணம் சிற்பி சொன்னான்: "அட பைத்தியக்காரர்களே! நீங்கள் இரண்டு பேரும் திறமைசாலிகளாக இருந்து என்ன பலன்? உங்களை நல்ல முறையில் கையாண்ட நானல்லவா புத்திசாலி! புரிகிறதா? அப்படி யாராவது தேடி வந்து பரிசு தந்தால், அது உங்களுக்கல்ல முட்டாள்களே, இந்த மேதாவிக்கு" என்று கிண்டலாகக் கூறினான்.

சற்று நேர மௌனம். சிலையின் ஒரு கண் முடிந்தது. இன்னும் ஒரே ஒரு கண் தான் பாக்கி. அதுவும் முடிந்தால்... அந்தக் கற்சிலை ஒரு கலைச் சுரங்கமாகும்; விலை மதிப்பில்லா அழகுச் சிலையாகும்! ஆனால்......

மகிழ்ச்சியுடன் இரண்டாவது கண்ணுக்கான முயற்சியில் இறங்கினான் சிற்பி வேலை மும்முரமாக நடந்தது. 'டக் டக்' கென்ற சப்தம் வேகமாக எழுந்தது. அந்தக் கிழவன் தன் முழு முயற்சியையும் அதில் காட்டிக் கொண்டிருந்தான். ஆனால்...?

திடீரென்று 'ஐயோ' என்று அலறினான். சிற்றுளியையும் சுத்தியலையும் தனித் தனியே வீசி எறிந்தான். கண்களைப் பொத்திக் கொண்டான். மீண்டும் அலறினான். ஏன்? என்ன நேர்ந்தது? சிலையின் கண்ணைத் திறக்கும் போது அதிலிருந்து பாய்ந்த சில கல் துண்டுகள் அந்தச் சிற்பியின் கண்களைத் துளைத்தன. சிற்பி அலறினான். கீழே விழுந்தான். "ஐயோ! என் கண்கள் எங்கே? எங்கே என் கண்கள்?" என்று அழுதுகொண்டே புரண்டான்; புரண்டு கொண்டே அழுதான்; அழுதுகொண்டேயிருந்தான்.

* * *

ஒரு வருடம் சென்றது.

ஆற்றில்ஒரேவெள்ளம். கரை புரண்டு ஓடியது. அந்த வேகத்தில், புதைபட்டுக் கிடந்த அந்த சிலை வெளியே தெரிந்தது. அதுமட்டுமல்ல; ஆற்றில் நீராட வந்த சிலபக்தர்கள்கூட்டத்தின் கண்களிலும் பட்டுவிட்டது. அவ்வளவுதான்! பாய்ந்தோடினார்கள் அவர்கள். அந்தச் சிலையைத் தூக்கினார்கள்.

"அடடா! ஆண்டவனின் சிலையல்லவா!" என்று கத்தினான் ஒருவன்.

"அப்பாடா! இத்தனை யுகமாக நம் கண்களுக்குத் தெரியாமல் பூமாதேவியிடம் மறைந்து கிடந்திருக்கிறாரே; இனி நமக்கு நல்லகாலமே!" என்றான் மற்றொருவன்.

அதற்குள் ஒருவன் சிலையின் கண்களை கவனித்தான். ஒரே ஒரு கண் தான் இருந்தது. "அடடா! இது ஒற்றைக்கண் கடவுள் அல்லவா?—புது அவதாரம்!"என உரக்கக்கத்தினான்.

அவ்வளவுதான்; செய்தி பரவியது. திரள் திரளாகக் கூட்டம் கூடியது 'ஒற்றைக் கண் கடவுளை'த் தரிசிக்க.

அடுத்த வாரமே அந்தக் கடவுளுக்குக் கோவில் கட்ட ஆரம்பித்தார்கள். ஒரு பெரிய கோவிலே அந்த ஆற்றுக்குப் பக்கத்தில் எழும்பி விட்டது!

அன்று கும்பாபிஷேகம்! பெரிய கூட்டம்! சிலையின் மேல் ஒரே வைர நகைகள்! மேளதாளத்துடன், அதை புதுக் கோவிலுக்குத் தூக்கிக் கொண்டு சென்றார்கள் ஊர்வலமாக.

அந்த நேரத்தில், ஆற்றங்கரை யோரத்தில் மெதுவாக ஒரு குரல் எழும்பியது. துருப்பிடித்துக் கிடந்த சிற்றுளிதான் அது. "ஏ, சுத்தியலே! பரிசு உனக்கா, எனக்கா என்று சண்டை போட்டாயே! பார்த்தாயா பரிசும் பதவியும் யாருக்கென்று?' என் முணமுணத்தது.

பக்கத்தில் கிடந்த சுத்தியலும்லேசாக சிரித்தது. "அதிருக்கட்டும் தம்பி! நம் இரண்டு பேரையும் மட்டம் தட்டிப் பேசினானே — பரிசு தனக்குத்தான் என்று மார் தட்டிக் கூவினானே சிற்பி, அவனைப் பார் அதோ!" என்றது. தூரத்தில் கண்ணில்லாத அந்தக் கிழவன் நடக்க முடியாமல் தட்டுத் தடுமாறி எங்கேயோ போய்க் கொண்டிருந்தான்!

* * *

**அறியாமையால், சாதாரண கல்லுக்குக் கிடைத்த உயர்ந்த நிலையைப் பார்த்தீர்களா? அதை வேண்டுமானால் 'அதிர்ஷ்டம்' என்று சொல்லலாம்.**

**—சொர்ணம்**

# முத்துவும் செல்வியும்

## 7. 'காப்பி' அடிக்காதே!

"செல்வி! வாத்தியார் கொடுத்த வீட்டுக் கணக்கெல்லாம் போட்டுட்டியா?" என்று 'ஒரு மாதிரி'யாகக் கேட்டுக் கொண்டே வந்தான் முத்து.

"ஓ, போட்டுட்டேனே! எனக்கென்ன கவலை. கணக்கு தான் தண்ணிப் பட்ட பாடாச்சே!" என்று அலட்சியமாகச் சொன்னது செல்வி. படிக்க ஆரம்பித்தது.

முத்து கணக்குப் போட ஆரம்பித்தான். வந்தால் தானே! கணக்கென்றால்தான் அவனுக்குக் கசப்பாயிற்றே! மண்டையை உடைத்துக் கொண்டான். போட்டுப் போட்டுப் பார்த்தான். ...ம்... வரவேயில்லை! அவனுக்கோ செல்வியைக் கேட்கவும் வெட்கம்! கணக்கைப் போடாமலும் போக முடியாது; வாத்தியாரின் கோபம் சும்மா விடாது! அவன் என்ன செய்வான்? சித்திரவதைதான் பட்டான்.

அவன் படும்பாட்டை யெல்லாம் கடைக் கண்ணால் பார்த்துச் சிரித்துக் கொண்டிருந்தது செல்வி. திடீடென்று தன் கணக்கு நோட்டை எடுத்தது. என்னவோ எழுதியது. மூடிவைத்தது. வெளியே சென்றது.

முத்துவுக்கு கணக்கு வரவில்லை; மூளைக் குழப்பம்தான் வந்தது. என்ன செய்வது என்று யோசித்தான். என்னவோ முடிவும் செய்தான். மெதுவாக சுற்று முற்றும் உற்றுப்பார்த்தான். செல்வியைக் காணோம். மெதுவாக எழுந்தான். பூனை போல நடந்தான். செல்வியின் மேஜையருகில் சென்றான். அதனுடைய கணக்கு நோட்டை எடுத்தான்.அவன் கைகள் நடுங்கின. நோட்டை அவசர அவசரமாகப் பிரித்தான். கணக்கை 'காப்பி'அடிக்கத் தயாரானான். எழுதஆரம்பித்தான்.

ஆனால்.... எழுத ஆரம்பித்த அவன் கைகள் 'சடக்' கென்று நின்றன. முகம் திடீரென்று மாறியது. ஏன் தெரியுமா? இந்தக் கேள்விக்குப் பதில் தேவை என்றால்,செல்வியின் கணக்கு நோட்டை நாமும் கொஞ்சம் படித்தாக வேண்டும்.

"அகப்பட்டுக் கொண்டாயா, இரட்டைவாலே! நீ என்ன செய்வாய் என்றுதான் எனக்குத் தெரியுமே! பள்ளிக்கூடத்தில் சரியாக கவனிப்பதில்லை; வீட்டுக்கு வந்ததும் கணக்குத் தெரியாமல் விழிப்பது; கடைசியில் திருட்டுத்தனமாக காப்பி அடிப்பது!...ம்...என்ன வேலை இதெல்லாம்...?" இப்படித்தான் நோட்டில் எழுதியிருந்தது!

திடீரென்று 'களுக்' கென்று சிரிப்பு சத்தம் கேட்டது. முத்து திரும்பினான். அறைவாயிலில் சிரித்துக் கொண்டு நின்றது செல்வி. அப்புறமென்ன? அன்று முதல் முத்து காப்பி அடிப்பதே இல்லை!.

## கேள்வி பதில்...

8-ம் பக்கத் தொடர்ச்சி

"நான் கழக கொள்கைக்கு விரோதமாக நடப்பதாக, 21-9-54 ல் ஒரு துண்டுப் பிரசுரம் என்னைப்பற்றி அவதூறாக எழுதி, அச்சடித்து வெளிவந்திருக்கிறது. நான் கடந்த 27-ஆண்டுகளாக திராவிடர் கழகத்திலிருந்து பணியாற்றி வந்திருக்கிறேன். முக்கண்ணைத் திறந்தாலும் குற்றம் குற்றமே என்று சொல்லும் வீரர் தமிழர் மரபில் உதித்தவன். கழகத்தையோ, கழக கொள்கைகளையோ காற்றில் பறக்கவிடக்கூடியவனல்ல. இன்று நான் காங்கிரஸோடு ஒத்துழைக்கிறேன் என்பதுகுற்றமென்றால், பெரியார் அவர்கள் குடியாத்தம் தேர்தலிலே காங்கிரஸ் கட்சியின் சார்பிலே கனம் பிரதம மந்திரி காமராஜ் அவர்களை ஆதரித்து பிரசாரம் செய்ததும் குற்றம் தானே? நான் பார்ப்பனரை ஆதரிக்கிறேன் என்றால் பெரியார் அவர்கள் சென்ற சட்ட சபை தேர்தலிலே மாஜி தோழர் ஆர். எஸ். சர்மா என்ற பார்ப்பனரை ஆதரித்து தேர்தல் பிரசாரம் செய்ததோடுகூட தோழர் ஆர். எஸ். சர்மா அவர்கள் வீட்டிலேயே தங்கியிருந்து, கழகப் பிரசாரப்பள்ளி நடத்தியது குற்றமல்லவா? மற்றும் சென்ற தேர்தலிலே கம்யூனிஸ்ட் கட்சியின் சார்பிலே பார்ப்பனரை ஆதரித்து பிரசாரம் செய்பவில்லையா? குறிப்பாக பி. ராமமூர்த்தி என்ற பார்ப்பனரை கம்யூனிஸ்டுக்காக சென்ற தேர்தலில் பிரசாரம் செய்து வெற்றி தேடி தரவில்லையா?

இப்போது படிக்கப்பட்ட இந்த இரண்டு ஆதாரங்களும் தோழர்களின் கேள்விக்கு சரியான பதில்களாகும் எனக்கருதுகிறேன். இன்னும் தேவையானால், பெரியார் அவர்கள் இரண்டாண்டுகளுக்கு முன்பு லக்ஷ்மிபுரம் யுவர் சங்கமென்ற பார்ப்பனர் சங்கத்தில் பேசிய பேச்சை படித்துக் கொள்ள வேண்டுகிறேன். பார்ப்பனரைப் பற்றி இதில் கேட்டிருக்கும் இரண்டொருஉபகேள்விகளுக்கு இதையே பதிலாக அமைத்துக் கொள்ள வேண்டுகிறேன். 'பார்ப்பானே வெளியேறு' என்ற முழக்கம் 'பார்ப்பனீயமே வெளியேறு' என்பதின் லட்சியச் சொல்தான் என்று கூறுகிறவர்களிடத்திலே நமக்கு அதிக கருத்து மாறுபாடு கிடையாது. பாம்பு ஒழிந்தால்தானே நஞ்சும் ஒழியும் என்பார்கள். உண்மைதான் ஆனால்நஞ்சுபாம்பிலேமட்டுமில்லை-உணவிலேகூட கலந்து தரப்பட்டு விடுகிறது. மொத்தமாக எதிலே கலந்திருக்கும் நஞ்சும்— அது பாம்பிலானாலும், பண்டத்திலானாலும்-அந்த நஞ்சு ஒழிக்கப்பட்டாக வேண்டும். நஞ்சு எடுக்கப்பட்ட பாம்புகள் எத்தனையோ வகையில் பயன் படுகின்றன. பாம்பாட்டியின் பிழைப்புக்கு மட்டுமல்ல; பாம்புத்தோல் பளபளப்பான மணி பர்சு, கெடிகார ரிப்பன் என்ற பொருள்களாகக்கூட மாறிவிடுகின்றன.

ஆரியம் என்ற விஷம் ஒழிக்கப்பட்டால் ஆரியர்களும் சமுதாயத்திற்குப் பயன்படும் மனிதர்களாக மாறிவிடுவர். ஆரியம் ஒரு கொள்கை. அது இந்நாள் தமிழர் பல்லோர் நெஞ்சிலும் இடம் பெற்றுவிட்ட விஷக் கொள்கை. அது அவசரமாக ஒழிக்கப்பட வேண்டிய ஒரு தத்துவம். இதில் எங்களுக்கு தடையில்லை என்பதுமட்டுமல்ல, அந்த வேலையில் வேகமாகவும்; விவேகமுடனும் ஈடுபட்டிருக்கிறோம்.

(கேள்வி) விக்கிரக ஆராதனையை ஒழிக்கும்பிள்ளையார் உடைப்பு போராட்டத்தில் கலந்து கொள்ளாதது ஏன்?

(பதில்) ஒரு குழந்தை, அழுகிப் போன ஒரு வாழைப் பழத்தை தின்னப் போவதாக வைத்துக் கொள்வோம். அழுகிய பழம் உடலுக்கு கேடு என்று நமக்குத் தெரிகிறது. குழந்தை அதை சாப்பிடக்கூடாது என்றும் கருதுகிறோம், அதை எப்படித் தடுப்பது? குழந்தையின்கையிலிருந்து பழத்தை வெடுக்கெனப் பிடுங்கி விடலாம். அழுகிய பழத்தால் வரும் நோயிலிருந்து அதைக் காப்பாற்றிவிடலாம். ஆனால் அதே நேரத்தில், பழம் பிடுங்கப் பட்டதால் அந்தக் குழந்தை பதறி அழ ஆரம்பிக்கும். பிடிவாதம் பிடித்து அலறும். அந்த அழுகையினால் அதற்கு நோய் ஏற்படலாம். அதனுடைய மகிழ்ச்சி குறையலாம். அந்த அழுகை, நமக்கு தொந்திரவாக இருக்கலாம், இப்படிப்பல இடையூறு விளையலாம். குழந்தையின் கையிலுள்ள பழத்தை, பிடுங்கி எறிவதற்குப்பதிலாக—அதனிடம் கொஞ்சியபடியே, "கண்ணே பாப்பா! இந்தப் பழத்தை சாப்பிட்டால் வயிறு உப்பிவிடும்; வயிற்றில் வலி ஏற்படும், பிறகு விளையாடவே முடியாது, அடுத்த வீட்டு தம்பிகள் விளையாடும் போது, நீ வயிற்று வலியால் அழுவாய்!" என்றெல்லாம் கூறி, அந்தப் பழத்தை குழந்தையே தானாக வெளியில் விட்டெறியும்படி செய்யலாம். குழந்தை அழுவதை கவனிக்காமல் அழுகல் வாழைப் பழத்தை (பிள்ளையாரை) தூக்கி எறியும் நிலையில் திராவிடர் கழகமும், குழந்தை-தானே அழுகிய பழத்தை தூக்கி எறியும் நிலை உண்டாக்கும் தன்மையில் தி. மு. கழகமும் இருக்கிறது என்கிறேன், ஆக, பிள்ளையார் என்பது அழுகிய வாழைப்பழம் என்பதிலே தி. க. — தி. மு. க. இரண்டு கழகங்களுக்கும்கருத்து வேற்றுமையில்லை. ஆபரேஷன் செய்கிற நேரத்திலே கூட வலி தெரியாமலிருக்க, 'குளோரபாம்' என்ற மயக்க மருந்து தேவைப் படுகிறது. சமுதாயத்திலே நாம் செய்து தீர வேண்டிய இத்தகைய 'மேஜர் ஆபரேஷன்'களை நோயாளிக்கு வலியும் களைப்பும் அதிகமாகாமல் ஜாக்கிரதையாக செய்து தீர வேண்டியிருக்கிறது.

## சக்கரவர்த்தி...

5-ம் பக்கத் தொடர்ச்சி

முடிசூட்ட நாள் குறிப்பிட்டிருந்த முதல்நாள் இரவு, கைகேயியிடம் காமபோதையில்தசரதன் உளறினன் என்று ஆச்சாரியாரே எழுதியிருக்கிறாரே; அந்தக் காம போதைகூட— புலன்களை அடக்கும் திறமையால் வந்ததுதான் போலும்! புத்திரசோகத்தை தாங்க முடியாமல் இறந்து பட்டானே; அந்த நிகழ்ச்சியும் புலன்களை அடக்கும் திறமையால் ஏற்பட்டதாகத்தான் ஆச்சாரியார் கூறுவாரோ; என்னவோ? கண்ணில் பட்ட காரிகையாம், இளமை பொங்கும் கைகேயி எனும் அழகியால் மனதைப் பறி கொடுத்து, வாயை அடக்கிப் பேசமுடியாமல் அவளுக்குப் பிறக்கும் மகனுக்கே நாடு தருவேன் எனக்கூறி, அவளுடன் தினந்தோறும் உடல் சுகம் அனுபவித்து, 'ராமன் காடேகினன்' என்ற சொல் சேவி புகுந்ததும் சிந்தைகெட்டு செத்து மடிந்த தசரதன், புலன்களை அடக்கியவன் என்று கூறுவது பொருந்துமா என்று பூணூல் வேந்தர் ஆச்சாரியாரைக் கேட்கிறேன்.

## அன்பே சிவமா?...

2-ம் பக்கத் தொடர்ச்சி

மில்டன் புரட்சி கவிபாடினர். மில்டன் அன்பை உணராதவரா? ஏழையின் கண்ணீரைப் பற்றி அவர் எழுதியுள்ள கவிதைகள் என்றென்றும் அழியாத எழிலோவியங்களாயிற்றே! அன்பை உணராதவர்களாம்!

நாஸ்திகர்கள் யார்? அன்பை உணராதவர்கள்யார்? என்பதை அமைச்சர் முதலிலே புரிந்து கொள்ளவேண்டும். அமைச்சரின் மிதமிஞ்சிய போக்கு கண்டு மில்டன் கல்லறை சிரிக்கும். கடவுளைக் கண்டு பிடித்து விட்டதாக நடிக்கும் எத்தர்களைப் போலல்லாமல், கடவுளைத் தேடிக் கொண்டிருக்கும் அறிவுலகம் இதய வேக்காட்டில் பெருமூச்சு விடும் அமைச்சர் இதை புரிந்து கொள்ள வேண்டும்.

## கலைத்தோட்டம்...

11-ம் பக்கத் தொடர்ச்சி

கிறது அத்தகைய நம்பத் தயங்கும் நிகழ்ச்சி!

நைல்நதியின் கரையோரம், தன்மனைவி அருகிலிருக்க விமானத்தில் பறந்து கொண்டிருந்தார் அவர். திடீரென்று அந்த விமானம் விபத்துக்குள்ளாகி நொறுங்கியது. அடுத்தகணம் விமானம் ஒரு யானைக்கூட்டத்தினருகே விழுந்து சிதறியது. செய்தி யறிந்த பத்திரிகைகள் துக்கம் கொண்டாடின, ஹெமிங்வேயின் மறைவு குறித்து. ஆனால் அந்த மரண கண்டத்திலிருந்து தப்பித்து விட்டார் ஹெமிங்வே. விபரம் அறிந்ததும், மற்றுமொரு விமானம் அனுப்பி வைக்கப்பட்டது உதவிக்காக. ஆனால் 'சித்திரகுப்தனி'ன் கணக்கேட்டிலே சிவப்புக் கோடு இழுக்கப் பட்டு விட்டதோ என்னவோ, அந்த விமானமும் தனது வாழ்வை முடித்துக் கொண்டது — நொறுங்கி விழுந்தது. ஆனால் இந்த முறையும் 'காலம்' அந்த இலக்கிய மேதைக்கு வாழ்வைத் தந்தது! இரண்டு முறை துப்பாக்கிக் குண்டிலிருந்து தப்பித்த ராபர்ட்கிளைவுக்கு நல்லதொரு எதிர்காலம் காத்து நின்றதைப் போல— ஹெமிங்வேயை நோக்கி நோபல்பரிசு ஊர்ந்து வருவதை முன்கூட்டியே உணர்ந்து கொண்டுவிட்டதோ என்னவோ அந்தக் 'காலம்!' கடைசியாக 'மோட்டார்' மூலம் வீடுவந்து சேர்ந்தார் ஹெமிங்வே, ஆச்சரியக் கண்களோடு தன்னைப் பார்த்தவர்களை நோக்கி, "தவருகக் கருதாதீர்கள், புத்தகங்கள் விற்பனையாக நான் செய்த தந்திரம் இதுவோ என்று' எனச் சமாதானம் சொல்லிய வண்ணம்!

அந்த இரு விபத்துக்கள் தந்த காயம்கூட இன்னும் மறையவில்லை; அதற்குள் இந்த ஆண்டின் நோபல் பரிசு அவருக்கே என்ற தேன் செய்தி கிடைத்துவிட்டது அந்த இலக்கியப் பெருமகனுக்கு, நேராகச் சென்றுகூட அந்தப் பரிசை பெற்றுக் கொள்ள முடியாத நிலையில்!





# கலைத்தோட்டம்

## 21. புதிய மேதை

### எர்னஸ்ட் ஹெமிங்வே

தேங்கிக் கிடந்த செல்வத்தை தேவாலயத்திருப்பணிக்கு அர்ப்பணித்து விடாமல், உலகத்தின் நன்றிக்குப் பாத்திரமானவர்களுக்குப் பரிசாக வழங்க ஏற்பாடு செய்துவிட்டு மடிந்தான், அன்றொருநாள் ஒரு பெருந்தனக்காரன். நோபல் என்பாரின் அந்தப் பெருமைக்குரிய செய்கை சென்ற ஐம்பத்து மூன்று வருட காலமாக உலகத்துக்குப் பேரறிஞர்கள் பலரை அறிமுகப்படுத்திக் கொண்டிருக்கிறது. அத்தகைய அறிஞர்களின் பட்டியலில் இவ்வாண்டு தனது புகழ் முத்திரையைப் பதிக்கப் போகிறவர்தான் எர்னஸ்ட் ஹெமிங்வே! 'இலக்கிய மேதை' என்ற பட்டத்தோடு, 1,60,000 ரூபாய் அளவுள்ள பரிசைப் பெறப் போகும் ஹெமிங்வே— இலக்கியக் காதலர்களுக்கு ஒரு புதிய மனிதர்! அமெரிக்காவின் பிரபல நாவலாசிரியர்!

இலக்கிய உலகம் எவரையும் வெகு எளிதில் "மேதை" என்று ஏற்றுக் கொண்டு விடுவதில்லை. கருத்துக்களை எடை போட்ட பின்புதான் — எழுத்துக்களிடையே புகுந்து புகுந்து அதன் தகுதியையும் தரத்தையும் கண்ட பின்புதான்—அந்த கிடைத்தற்கரிய பட்டத்தை வழங்குகிறது. ஆகவே ஒரே சமயத்தில் பரிசு, புகழ் இரண்டையும் ஏற்றுக் கொள்ளும் ஹெமிங்வேயை பேரறிஞன் என்று அழைப்பதில் வியப்பில்லை. அவரது எழுத்துக்களை "இயற்கையின் கண்ணாடி" என்று போற்றுகிறார்கள், பரிசு அளிக்கிறவர்கள்.

ஆனால் ஹெமிங்வேயின்வெற்றிக்குக் காரணம் — அவரது எழுத்துக்களிலே இயற்கையின் உயிர் இருப்பதற்குக் காரணம்-அவரது அனுபவம் என்றே சொல்லலாம். மழலை மொழி பேசி விளையாடிய பருவம் முதல், பரிசு பெறக் காத்து நிற்கும் இன்றைய ஐம்பத்து ஆறாவது வயதுவரை அவர் தாங்கிய இன்னல் அல்லல்களும் — பணியாற்றிய துறைகளில் ஏற்ற அனுபவத்தழும்புகளுமே அவரது எழுத்துக்களிலே 'ஜீவனை'ப் புகுத்தியிருக்கின்றன.

★ ★ ★

### "கடலும் கிழவனும்"

இந்தப் பெயரைக் கொண்ட நாவல்தான் ஹெமிங்வேயுக்கு நோபல் பரிசை வழங்குகிறது. ஒரு வயோதிகன். மீன் பிடிப்பதில் பேரார்வம் கொண்ட பித்தன் கடலன்னையின் மடியிலே தவழ்ந்து கொண்டிருந்த 'நீல மாரிலின்' என்ற ஒரு வகை மீன் அவன் நெஞ்சத்தைக் கவ்விக் கொண்டது. எப்படியும் அந்த மீனைப் பெற்றே தீர்வது என்ற பேரார்வம் கொள்கிறான் அவன். தூண்டில் சகிதமாக மூன்று முழு நாட்களைக் கழிக்கிறான் கடலில். தனிமையாக அவன் தொடுத்த அந்தப் போர் அவனுக்குப் பெரும் தோல்வியைத்தான் தருகிறது. 'நீல மாரிலின்' எனும் அந்த அழகிய மீன் பயங்கர 'ஷார்க்' ஒன்றின் கோரப் பசிக்கு இரையாகி விடுகிறது. முயற்சி வீணாக-நெஞ்சத்து ஆசையும் பாழாக-அந்த மீனின் எலும்புக் கூட்டை மட்டும் எடுத்துக்கொண்டு வீடு திரும்புகிறான், அந்த பரிதாபத்திற்குரிய கிழவன்.

இதுதான் கதை. பொழுது போக்குக்காக மீன் பிடிக்கும் பழக்கமுடைய ஒரு கிழவனைச் சுற்றிச் சுழலுகிறது ஒரு மிகப் பெரியதத்துவம். கிழவனை 'மனிதத் தன்மை'யாக — அவன் அடையத் துடிக்கும் அழகு மீனை 'ஆக்கச் செயல்'களாக — நடுவில் குறுக்கிட்டு அவன் எண்ணத்தைக் குலைக்கும் 'ஷார்க்'குகளை மனிதத் தன்மைக்குமுன் என்றும் குன்றாத 'எதிர்ப்பு'களாக உருவகப்படுத்துகிறார் ஹெமிங்வே. இதில் மற்றொருபேருண்மை—அவர்தனது அனுபவத்தின்அஸ்திவாரத்தின் மேலேதான் இதை அமைத்திருக்கிறார். ஏனெனில் அவரே ஒரு மீன்பிடிக்கும் பழக்கமுள்ளவர். தனது இரண்டாவது வயதில் தந்தையிடமிருந்து ஒரு தூண்டிலைப் பரிசாகப் பெற்றாராம். அன்று முதல் இன்றுவரை விளையாட்டாக மீன்பிடிப்பதிலே அவர் பேரின்பம் அடைகிறாராம். சமீபத்தில் புதிதாகக் காணப்பட்ட ஒரு வகை மீனுக்குக்கூட அவருடைய பெயரையே வைத்திருக்கிறார்களாம்!

★ ★ ★

### "போய் வருகிறேன்; போர்க் கருவிகளே!"

ஹெமிங்வேயின் அனுபவத்தின் அடிப்படையில் தோன்றிய நவீனங்களில் இதுவும் ஒன்று. அவரது முதல் நாவல்—எழுத்திலே வெற்றி பெறலாம் என்ற நம்பிக்கையை அவருக்கு ஊட்டிய அனுபவத்தின் சாயல்!

முதல் உலக மகா யுத்தத்தில் அவர் போர் முனையில் பணியாற்றி யிருக்கிறார். இத்தாலியிலே மோட்டார் ஓட்டியாகவும், பின் போர்வீரனாகவும் அவர் ஆற்றிய தொண்டுதான் அந்த நாவலின் மூலதனம்! உலகத்தின் பாராட்டுகளை ஏற்றுக் கொண்டது அந்த நாவல். ஏனெனில் அது அவரது அனுபவத்தின் படப் பிடிப்பு! எழுத்துக்கு எழுத்து 'உண்மை' பளிச்சிடும் உயிர்க் கதை!

★ ★ ★

"சிறிய சொற்றொடர்களாக எழுதுங்கள்; சிறிய பாராவிலேயே அமையுங்கள்; ஆனால் நடையிலே வேகமிருக்கட்டும்; துடிப்பிருக்கட்டும்"— 'தாரகை' என்ற செய்திப் பத்திரிகையில் துணை ஆசிரியர் பீடத்தில் அமர்ந்தபோது, அவர் மேல் வீசப்பட்டன அலுவலகத்தாரின் இந்தக் கட்டளைகள்! கட்டளைக்குக்கீழ்ப்படிந்து அவர் எழுதத் தொடங்கவில்லை; அதற்கு அவசியமும் இல்லை; ஏனெனில் பள்ளிக்கூட எழுத்தேடுகளில் அவர் எழுதிக் கொண்டிருந்த காலம் முதல், அவரது எழுத்துக்களில் இயற்கையாகவே துடிப்பிருந்தது! நெஞ்சத்தை ஊடுருவித் துளைக்கும் வேகமுமிருந்தது!

'தாரகை'யில் அவர் பணியாற்றிய நேரத்தில், எடுத்துக் காட்டிய ஆணித்தரமான அரசியல் விளக்கங்களும், விமர்சனங்களும் அவருக்குப் பெரும்புகழைத் தேடித் தந்தன. தாரகையின் 'பிரதிநிதி'யாக அவர் ஐரோப்பாவில் தங்கியிருந்த காலத்தில்தான் முதன் முதலில் இலக்கியத் துறையில் ஈடுபட ஆரம்பித்தார்.

★ ★ ★

### "கதிரவனும் எழுந்தான்!"

ஹெமிங்வேயின் இலக்கியப் படைப்புகளின் சிகரமிது. வாழ்க்கையில் விரக்தி அடைந்தோரும், சமூகத்திலிருந்து கட்டாயமாக விரட்டப்பட்டோரும், அதன் பிடிப்பிலிருந்து விலகி ஓடிக்கொண்டிருந்தோரும், சிந்தை குளிர்க்கும் சிங்காரத் தோட்டங்களை வெறுத்து-அழகு நிறை வண்ணமாளிகைகளை மறுத்து-அவை ஊட்டும் பேரின்பதை உதறித்தள்ளி—மதுக்கடைகளை நோக்கி ஓடுகிறார்கள். மதுக்கலயங்களிலே 'உலக'த்தைக் காணுகிறார்கள்; மதுவின் போதையிலே 'இன்ப'த்தைச் சுவைக்கிறார்கள். குடிக்கிறார்கள்...குடிக்கிறார்கள்.. 'என்ன வாழ்க்கையப்பா இது' என்று பிலாக்கணம் வைக்கிறார்கள்...மீண்டும் குடிக்கிறார்கள்... குடித்துக் கொண்டேயிருக்கிறார்கள்...

இத்தகைய கதாபாத்திரங்களைக் கொண்டு ஹெமிங்வேயின் இருபத்தி எட்டாவது வயதில் வெளியான இந்த நாவல்தான் அவரது வெற்றியின் முதல்படி!

★ ★ ★

இலக்கிய உலகத்திலே அடியெடுத்து வைத்து, அதன் பாசப் பிணைப்பிலே சிக்கிவிட்டவர்கள் வேறெந்த நடவடிக்கைகளிலும் ஈடுபடுவது அபூர்வம். தங்களுக்கென தனி உலகம் அமைத்து, கற்பனையின் எல்லைக் கோட்டிலேயே சஞ்சரித்துக் கொண்டிருப்பார்கள் அவர்கள். இலக்கிய மேதைகளின் வாழ்விலக்கணம் என்னவோ அப்படித்தான் இருந்திருக்கிறது பல்லாண்டுகளாக. இந்த நியதியிலிருந்து மாறுபட்டுக் காண்கிறார், இருபதாவது நூற்றாண்டு வாசியான ஹெமிங்வே. அவர் எழுத்தாளர் மட்டு மல்ல; திறமையான வேட்டைக்காரர்! பிரபல குத்துச் சண்டைக்காரர்! இன்னும் மற்ற மற்ற விளையாட்டுகளிலே பெரும் தீவிரக்காரர்!

சில ஆண்டுகளுக்கு முன் அவரது வாழ்க்கையில் நிகழ்ந்த ஒரு சம்பவமே அவரது 'உடல் பலத்'தை எடுத்துக் காட்டுகிறது. ஒரு சிற்றுண்டிசாலையிலிருந்து வெளியே வந்து கொண்டிருந்தாராம் அவர். அப்போது சாலையில் இரு நாய்கள் பெருத்த தோற்றம் கொண்ட பயங்கர'அல்சாசியன்' நாய்கள்- 'மிருகயுத்தம்' நடத்திக் கொண்டிருந்தனவாம். பார்த்தவர்கள் பயந்தவர்களாய் ஒதுங்கிச் சென்றனர். 'மிருகப்பண்புக்கு முன் மனிதத்தன்மை தலைகுனிவதாக' எண்ணிய ஹெமிங்வே நேராக அந்தப் போர்க்களத்திலே புகுந்தாராம். இரண்டு நாய்களில் ஒன்றை கட்டிப் பிடித்து சுவற்றோடு தேய்த்து, சண்டையை விலக்கி விட்டாராம்.

★ ★ ★

### மரணத்தின் வாயிலில் இருமுறை!

கதை போன்றது; கற்பனைக்கும் மீறிய கனவு போன்றது— ஒரு பயங்கரச் சம்பவம்—ஒரு சமீபத்திய நிகழ்ச்சி—அந்தக் கதாசிரியரின் வாழ்க்கையில் குறுக்கிட்டது! இரண்டு முறை மரணத்தின் வாயிலுக்குச் சென்றார்-"ஐயோ! இறந்து பட்டாராமே எழுத்துலக வேந்தன்!" என்று உலகம் எழுப்பிய மரண ஒலியைக் கேட்டார் — மீண்டும் மனிதனாகவே பவனி வந்தார்! வேடிக்கை போல இருக்கும்—எனினும் நடந்திருக்

★ தொடர்ச்சி 10-ம் பக்கம்

★ புகழ் மணத்தைப் பரப்பிவிட்டு, மரணத்தைத் தழுவிய இலக்கிய மலர்களைப் பற்றித்தான் இதுவரை 'கலைத்தோட்டத்தில் எழுதிவந்திருக்கிறோம். ஆனால், இவ்விதழில், தேடி வரும் பரிசை ஏற்றுக் கோள்ளப் போகும் அமெரிக்காவின் 'புதிய மேதை' ஒருவரை அறிமுகப் படுத்துகிறோம்.

# கடைசிப்பக்கம்

செல்வமணி-சென்னை-6.

(?) இராவணுதியர்கள் மனிதர்களைக் கொன்று தின்ருர்கள் என்று கல்கியார் எழுதியிருக்கிருரே; அதன் பொருள் என்ன?

இது கல்கி ராமாயணமாயிருக்கலாம். பரவாயில்லை; ராவணுதியர்களாவது மனிதனை அடித்து தின்னும் அவதாரமெடுத்திருந்தார்கள்—மகா விஷ்ணுவைப் போல மலந்தின்னும் வராஹவதாரம் எடுக்காத வரையில் க்ஷேமந்தானே என்று கல்கியாருக்கே எழுதிக் கேளுங்கள் தோழரே!

வி. கோகுலன்-சென்னை-5

(?) ஒரு சினிமாப் பத்திரிகை திராவிட இயக்க எழுத்தாளர்களையும், நடிகர்களையும் திட்டுவதையே தொழிலாகக் கொண்டிருக்கிறதே; என்?

"இந்து முஸ்லீம்" சண்டையை மூட்டி விடுவதற்காகவே கலையுலகத்தில் முளைத்திருக்கும் களான் அது என்பது போகப் போகத் தெளிவாகத் தெரிந்துவிடும். திராவிட இயக்கத்தாரை திட்டுவதற்காகவே துவங்கப்பட்ட கூலிப்பத்திரிகை அது!

கு. ஜோசப். பேஸ்கி (சுதா) பாளையங்கோட்டை.

(?) பணக்காரனும் ஏழையும் எந்த இடத்தில் ஒன்று சேருகிருர்கள்?

புரட்சி நடந்தால்—சர்க்கார் ஆஸ்பத்திரியில்! புத்தி வந்துவிட்டால் — பொதுவுடைமை பூமியில்!

(?) ஒரு கடவுளை வணங்குவது சரியானுல் பல கடவுள்களை வணங்குவதுஎங்ஙனம்தவருகும்

இந்தக் கேள்வி எப்படித் தெரியுமா இருக்கிறது? ஒரு மனைவியுடன் வாழுவது சரியானுல்பலமனைவிகளுடன் வாழ்வது எங்ஙனம் தவருகும் என்று கேட்பது போலிருக்கிறது.

"கூந்தலான்"—வேலூர்.

(?) கவிஞர் சுரதா, தி. மு. கழகத்தில் எப்போது சேர்ந்தார்?

கல்லக்குடி போராட்டத்திற்கு முதல் வாரம் சென்னையில் நடைபெற்ற மாவட்ட தி. மு. க. மாநாட்டின் போது அவர் தி. மு. க. உறுப்பினராகி மாநாட்டு மேடையிலும் அமர்ந்திருந்தார்.

(?) எழுத்தாணியாரே! பட்டமும் பதவியும் பெறவே கட்சிகள் தோன்றுகின்றனவே யன்றி போது ஜன நன்மைக்காக அல்ல என்பது என்வாதம். தங்கள் அபிப்பிராயம் என்ன?

தங்கள் எண்ணம் போல் சில கட்சிகள் பதவி வேட்டையை மட்டும் குறிக்கோளாகக்கொண்டு தோன்றியிருக்கலாம். அடிமை நாடுகளுக்கும்—தாழ்ந்த சமுதாயங்களுக்கும் — சரண்டப்பட்ட இனங்களுக்கும்—விடுதலை அளிப்பதற்காக தோன்றிய கட்சிகளையும் மறந்துவிடக்கூடாது நண்பரே! ஒரு சில கட்சிகளின் தவறுகளை வைத்துக்கொண்டு எல்லாக் கட்சிகளைப் பற்றியும் அபிப்பிராயம் கூறிவிட முடியாது.

மா. பாலசுப்ரமணியம், பாலமேடு

(?) திராவிடநாடு சுதந்திரம் அடைந்தால் வட நாட்டில் பஞ்சம் ஏற்படுமோ?

மூளைப்பஞ்சம் வேண்டுமானுல் ஏற்படலாம்.

க. சே. சாமியப்பன்—ஊஞ்சலூர்

(?) மனிதன் வாழ்க்கையில் எதற்கு முதலிடம் தருவது; அறிவுக்கா? ஊக்கத்திற்கா?

அறிவு பெற விழையும் ஊக்கத்திற்கு!

துரை முருகேசன்—காரமடை

(?) ராமனுக்கு ஆயிரக் கணக்கில் ஆலயங்கள் அமைத்தவர்கள், பஞ்ச பாண்டவர்களுக்கு ஒரு மடம் கூடக் கட்டாதது ஏன்?

அவர்கள் பெயருக்கு முன்பே "பஞ்ச"ம் வந்து விட்டதே; அதனுல் தான் அந்த பஞ்ச பாண்டவருக்கு ஒரு மடம் கூட கிடைக்க வில்லை போலும்!

(?) மதம், பணம், இவற்றின் தாய் எது?

மோட்சத்தின் ஆசை நாயகி தான் மதத்தின் தாய். மோசத்தின் ஆசை நாயகி பணத்தின் தாய்.

(?) மதம், பணம் இவற்றின் பிள்ளை எது?

மதத்தின் பிள்ளை கடவுள். பணத்தின் பிள்ளை பக்தன்.

ப. ஆறுமுகம் திருவாரூர்.

(?) "செல்வாக்கற்ற கட்சிக்குத்தான் கிளர்ச்சி தேவை; என்று அண்ணுதுரை லால்குடி மாநாட்டில் கூறினுரே" இப்போது 3, 4 கிளர்ச்சிகளை நடத்துவதாகக் கூறுகிருரே; அப்படியானுல் உங்கள் கட்சி செல்வாக்கற்ற கட்சியா?

லால்குடியில் அண்ணு அப்படிக் கூறவில்லை. "செல்வாக்கற்ற கட்சிதான் கிளர்ச்சிகளைத் தேடி அலையவேண்டும்" என்று கூறினுர். அவர் அங்கே சொன்ன முக்கிய கருத்தை படிக்க மறந்துவிட்டீரே!

"தி. மு. கழகம் வலுவில் போராட்டத்தை தேடி அலையாது - வந்த போராட்டத்தையும் விடாது" என்றும் அண்ணு கூறியிருக்கிருர்.

பி. மலையான்-சென்னை-1.

(?) மனைவியை விபச்சாரியாக்கிய கணவன் — மகனைக் கொன்ற தகப்பன்—தாயின் கற்புநெறி தவறச்செய்த மகன் —என்று புராணத்தில் பட்டியல் இருக்கிறதே; இப்போதுள்ள பக்தர்களும் அப்படிச் செய்வார்களா?

சே! சே! முன்னொரு காலத்தில், பக்தி மார்க்கம் வாலிப முறுக்கோடு விளங்கியபோது, அந்த வெறியில் பக்த கோடிகள் ஏதேதோ செய்துவிட்டனர். இப்போதுதான், வயதான ஆச்சாரியார்களையும் வழுக்கை விழுந்த 'வாரி'களையும் மட்டுமே சேர்க்கக்கூடிய அளவுக்கு பக்திக்கும் விருத்தாப்பிய பருவம்வந்து விட்டதே — சுடுகாட்டுக்குப் போகவேண்டிய தள்ளாத வயதில் அந்த 'பக்தி' இப்படி யெல்லாம் தாறுமாருக நடக்காது, நண்பரே!

மு. தமிழ்ச் செல்வன் பழைய வத்தலகுண்டு

(?) கம்பருக்கும் ஜீவானந்தருக்குமுள்ள ஒற்றுமை வேற்றுமை என்ன?

இருவருக்கும் ராமமூர்த்தியே தான் கடவுள் என்பதுஒற்றுமை. கம்பர், ராமாயணத்தை பொன்னுக்குப் பாடினுர். ஜீவானந்தமோ-பொதுவுடைமைக்குப் பாடுகிறேன் என்கிருர். இதுதான் வேற்றுமை.

சின்னச்சாமி சிந்தாதிரிப்பேட்டை

(?) காங்கிரசின் புனிதத் தன்மையை உணர்ந்த காங்கிரஸ் அங்கத்தினர் ஒருவராவது இப்போது உண்டா? அவர் யார்?

உண்டு; அவர் இப்போது ராஜகட்டத்தில் நீங்காத தூக்கத்தில் ஆழ்ந்திருக்கிருர்;

★



மு. கருணாநிதியால் 'முரசொலி' அச்சகத்தில் அச்சிடப்படுகிறது.
அலுவலகம்: 62. எஸ். பி. சன்னதி தெரு, ராயப்பேட்டை, சென்னை—14.

